

திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயிலுக்குத் தமிழக மேலவைத் தலைவர் "சிலம்புச்செல்வர்" டாக்டர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் வருகைதந்து, சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்துதல். திருச்செந்தூர்த் தொகுதிச் சட்டமன்ற உறுப்பினர் திரு. எஸ். கேசவ ஆதித்தன், அறநிலைய ஆணையர் திரு. யு. சுப்பிரமணியன், மற்றும் அறங்காவலர் குழுத் தலைவர் திரு. சி. ஆர். பாலகிருஷ்ணன் முதலிய பெருமக்கள் பலர் உடனுள்ளனர்.



முகப்பு :

கங்கைகொண்ட சோழபுரம் கோயில்,
உடையார்பாளையம் வட்டம்,
திருச்சிராப்பள்ளி மாவட்டம்.

# திருக்கோயில்

ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

மாலை: 22 | இரவுத்திரி ஆண்டு-ஆனித் திங்கள்-ஜூன்-1980 | மணி: 9

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர் களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

ஆணையர் அவர்கள்,
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை — 600 034

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப்பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. 15—00 உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங்களுக்கு, ஒரு இதழ் ரூ. 1—25 வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் ''சந்தாதாரர்'' ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொருவரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும்பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைத் குறிப்பிட்டு மாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் (Pin Code) எண்ணுடன் தெரிவிக்குமாறும் கேட்டுக்கொள்ளப் படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறையாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற்பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. 9—60 ஆகின்றது. ஆதலால் வெளிநாட்டுச் சந்தா, ரூ. 20—00-ல் இருந்து ரூ.25—00 ஆக ஜனவரி 1978 முதல் மாற்றி அமைக்கப் பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப் போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்

# "தமிழகத்தின் திருக்கோவில்கள்"

## வண்ணத் திரைப்பட வெளியீட்டு விழா

பகுதி 1: கட்டிடக்கலையும், சிற்பக்கலையும்:—
நேர அளவு: 30 மணித்துளிகள்

1980 சூலைத் திங்கள் 31-ஆம்நாள் வியாழன் மாலை, சென்னைக் கலைவாணர் அரங்கில், தமிழக இந்து சமய அறநிலையத்துறை தயாரித்துள்ள"தமிழகத்தின் திருக்கோவில்கள்" என்ற வண்ணத் திரைப்படவெளியீட்டு விழா, மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. அன்று மாலை 6 மணி அளவில், தமிழக அரசுக் கலைஞர் லால்குடி திரு.ஜி. ஜெயராமன் அவர்கள், வயலின் இசை வழங்கினார்கள். பின்னர் விழாவின் தொடக்கத்தில் அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் வரவேற்புச் சிறப்புரை நிகழ்த்தி வேண்டிக் கொண்டபடி, நமது தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள், ஃடி வண்ணத் திரைப்படத்தை வெளியிட்டார்கள்.

''தமிழகத்தின் திருக்கோவில்கள்'' என்னும் விளக்க உரையோடு கூடிய வண்ணத் திரைப்படம், சென்னைக்கு அருகிலுள்ளதும், நாள்தோறும் இரண்டு கழுகுகள் வந்து உணவு உண்டு செல்வதும் ஆகிய, திருக்கழுக்குன்றம் மலைக் கோயிற் காட்சியிலிருந்து தொடங்குகின்றது. இந்த இரு பறவைகளும் நிகழ்காலத்தில் ஒன்றி, எதிர்காலத்தை ஊடுருவிநின்று, பரவிநிற்கும் இறந்த காலப் பழைமையின் அடையாளங்களாகும்.

நம்முடைய முன்னோர்கள், ஒப்புயர்வற்ற ஓர் உலகப்பேராற்றல் (One Cosmic Supreme Power)) உண்டு என்றும், அதுவே மேலான உண்மை மெய்ப்பொருள் என்றும், பலவேறு வகையான தெய்வங்களும் தேவதைகளும் அதனுடைய பலவகைப்பட்ட வெளிப்பாடுகளே என்றும் உணர்ந்து, அதுபற்றிய கருத்தினை உலகுக்கு வெளியிட்டு உணர்த்தினர். கோயில் என்பது, எதனிடமிருந்து ஒவ்வொரு பொருளும் வெளிப்படுகின்றதோ, எதனுக்குள்ளே ஒவ்வொரு பொருளும் சென்று ஒடுங்குகின்றதோ, அந்தப் பேராற்றற் பொருளை, மக்கள் அனைவரும், பொறிபுலன்களால் கண்டுணர்ந்து அனுபவிக்கப் பெறுதற்குரிய, ஓர் இனிய எழிற் பருமை வடிவ அமைப்பேயாகும்.

இந்த வண்ணத் திரைப்படம், கோயிற் கட்டிடக்கலையின் வளர்ச்சித்துறையில் பின்வரும் படிநிலைகளை விளக்கிக் காட்டுவதுடன், வெவ்வேறு நூற்றாண்டுகளைச் சார்ந்த, குறிப்பிடத்தக்க சிறப்புள்ள பல்வேறு அற்புதச்

---

## நன்றிக் கடப்பாடுகள்

**(CREDITS)**

| | | |
|---|---|---|
| படம் எடுப்பித்து, வழங்குபவர் .. | : | ஆணையர் அவர்கள்,<br>இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,<br>தமிழ்நாடு அரசு. |
| தயாரிப்பு, விளக்கவுரை, படப்பிடிப்பு, இயக்குவிப்பு | : | வி. பாலகிருஷ்ணன் |
| நடனக்கலை அமைப்பும், நடனமும் .. | : | டாக்டர் பத்மாசுப்பிரமணியம் |
| இசை .. .. .. | : | எஸ். வி. இரமணன் & பத்மாசுப்பிரமணியம் |
| பதிப்பு .. .. .. | : | சுவாமி & அம்பலம் |

சிற்பங்களைப் பற்றியும்கூட, அழகுறச் சித்திரித்துக் காட்டுகின்றது.

(அ) கி. பி. 6ஆம் நூற்றாண்டுக்கு முன்பு : மரம், உலோகம் மற்றும் செங்கல்லால் ஆன கோயில்கள்.

(ஆ) பல்லவர்கள் மற்றும் பாண்டியர்களின் குகைக்கோயில்கள்.

(இ) பல்லவர்கள், பாண்டியர்களின் ஒற்றைக் கல் கோயில்கள்.

(ஈ) பல்லவர்கள் எடுப்பித்த கற்றளிகள்.

(உ) சோழர்காலத்துக் கோயில்களின் பொற்காலம் : இப்பகுதியில் நடராசப் பெருமானைப் பற்றிய தத்துவ நுட்பக்கருத்துக்கள் விளக்கப் பெறுகின்றன. கோயில்களிலுள்ள நடனக் கலைச் சிற்பங்களுக்கும், இந்தியப் பரதநாட்டியக் கலைக்கும் இடையே உள்ள தொடர்பினைப் புலப்படுத்தும் ஒரு நடனநிகழ்ச்சியும் கூட, இப்பகுதியில் இடம்பெற்றுள்ளது.

(ஊ) சோழர்களுக்குப் பிற்காலம் : விசயநகரப் பேரரசர்கள், மதுரை நாயக்க மன்னர்கள் காலத்தில், கோயிற் கட்டிடங்கள், மிகப் பெரிய கோபுரங்களும், திருக்குளங்களும், 16-கால்-100 கால்-1000 கால்களையுடைய மண்டபங்களும், மற்றும் மிகப்பெரிய விசாலமான மேற்கூரை வேயப்பெற்ற பிராகாரங்களும், கொண்டனவாய் வளர்ந்தன.

(எ) தற்காலம்: மாமல்லபுரத்திலுள்ள தமிழ் நாடு அரசின் சிற்பக்கலைக் கல்லூரியும், ஆங்காங்கு நடைபெற்று வரும் பல்வேறு திருக் கோயில்களின் திருப்பணிகளும், தொன்மைக் காலம் முதல் இன்றுவரையில், வளர்ந்து நிலவி வரும் கோயிற் கட்டிடக்கலையின் பாரம்பரியத்தினை, அழகுறப் புலப்படுத்தி விளக்குகின்றன.

கோயில் என்பது, சமயச் சார்பில் மக்கட் டிரள் கூடுகின்ற வெறும் இடம் அன்று; தெய்விக இயற்கையினை, மனிதன் தன் படைப்பாற்றலினால் வியப்பூட்டி, மெய்ம்மயிர் சிலிர்க்கச் செய்யும்வகையில், வெளிப்படுத்தி உணர்த்துகின்ற மாபெரும் கலைவடிவ நிறுவனங்களே, கோயில்கள் ஆகும்.

பகுதி 2 : விழாக்களும், தொடர்புடைய கலைகளும்:
நேரம்: 30 மணித்துளிகள்:

மதுரையில் ஆண்டுதோறும் நடைபெறுகின்ற மிகப்பெரிய சித்திரைத் திருவிழா, எண்ணற்ற பல லட்சக்கணக்கான மக்கள் கூடுகின்ற சிறந்த திருவிழா வாகும். பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து நிலவி வரும் தமிழகப் பண்பாட்டினை, இவ்விழா மிக அற்புதமான முறையில் பொற்புறப் புலப்படுத்துகின்றது. இந்து மதத்தைச் சார்ந்த மக்களுக்கு, மதம் என்பது வெறும் கொள்கையன்று, அஃதொரு பெரிய வாழ்க்கை நெறிமுறையாகும். அதனால் அவர்கள் வாழ்க்கையின் சிறப்பு மிக்க எல்லாக் கூறுகளையும், சமயத்துடன் தொடர்புபடுத்துகின்றனர். கலைகளும் தெய்விகமும், அவர்களின் வாழ்க்கையில் பின்னிப் பிணைந்து இணைந்து ஒன்றி நிற்கின்றன. இதுதான், கோயில்கள் ஒரு பெரும் நிறுவனம் என்பதைக் குறிக்கும் அடிப்படைக் கொள்கையாகும். இந்த வண்ணத் திரைப்படம், கடந்த காலத்தில், கழிந்துபோன பலவேறு நூற்றாண்டுகளில், கோயில்களுடன் தொடர்பு பெற்றிருந்த ஒரு சில முக்கியமான சிறந்த கலைகளை, அழகுறப் புனைந்து தொகுத்துக் காட்டுகின்றது.

(அ) ஓவியங்கள் :

கி.பி. எட்டாம் நூற்றாண்டுமுதல் தொடங்கும் வண்ணச் சுவரோவியங்கள்.

(ஆ) வெண்கலப் படிமங்கள் :

கி.பி. 7-ஆம் நூற்றாண்டு முதல், இன்றுவரை வார்த்து வடிக்கப்பெறும் தெய்வப் படிமங்கள்.

(இ) அணிகலன்கள் :

பண்டைக்காலம் முதல், பலவேறு நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை.

(ஈ) மரவேலை :

(உ) தந்தச் சிற்பங்கள் :

இதற்குப் பின்னர் ஒருசில சடங்குகளும், விழாக்களும், பரந்து விரிந்த முறையில் அமைந்த, சிறந்த அழகோவிய வண்ணக் காட்சியாகத் தொடர்கின்றன.

1. கும்பாபிஷேகம் : ஒரு கோயில் கட்டி முடிந்த பிறகு அல்லது திருப்பணி செய்து நிறைவேறிய பிறகு, அதனைப் புனிதப்படுத்தித் தெய்வசாந்நித்தியம் உள்ளதாகச் செய்வதற்கு இயற்றப்பெறும் சடங்கு.

2. அபிஷேகம் : நாள்தோறும் கோயில்களில் தெய்வத் திருவுருவங்களுக்கு முறையாகச் செய்யப்பெறும் திருமஞ்சனம்.

3. விழா ஊர்வலங்கள்: பலவேறு வகையான வாகனங்கள், பல்லக்குகள், வெள்ளித் தேர்கள், தங்கத்தேர்கள் முதலியன.

4. தெப்ப உற்சவம் :

5. தேர்த் திருவிழா : மிகப்பெரிய மரத் தேர்களைப் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் ஒன்றுசேர்ந்து, ஏழை பணக்காரன்-இளைஞர் முதிஞர் என்னும் எத்தகைய வேறுபாடும் இன்றி, வடம்பிடித்து இழுத்தல்.

6. ஆண்டுதோறும் முறைப்படியான சடங்குகளுடன், மதுரைத் திருக்கோயிலில், அருள்மிகு மீனாட்சியம்மைக்கு நடத்தப்பெறும் திருமணச் சிறப்புவிழா முதலியன, இப்பகுதியில் காண்போர் கண்ணிற்கும் கருத்திற்கும் விருந்தாக, அழகுறக் காட்டப்பெறுகின்றன.

கோயில்களில் உள்ள பண்டைக்காலக் கல்வெட்டுக்கள், இந்து சமயக் கோயில்கள், எல்லாக் காலத்திலுமே சமுதாயநலப் பெரு நிலையங்களாக விளங்கி வந்ததனை உணர்த்துகின்றன. இன்றும்கூட, பற்பல கோயில்கள் இலவச மருத்துவ மனைகள், கல்விநிறுவனங்கள், செவிடர் ஊமையர் பள்ளிகள் முதலியன வற்றை நடத்தி வருகின்றன. கோயில்கள், தமது சிற்பங்கள், ஓவியங்கள், படிமங்கள், விழாக்கள் ஆகியவற்றின்மூலம், மிக நெடுந் தொலைவிலுள்ள நீண்ட கடந்த காலத்தால், நிகழ்காலத்திற்குள் நுழைந்து, நெடுந்தொலைவிலுள்ள எதிர்காலத்தை ஊடுருவிச் சென்று, வளர்ந்து வருகின்ற, ஆற்றல்மிக்க உயிர்ப்புள்ள ஒருபெரும் பாரம்பரியத்தை, நாம் கண்டு வியந்து மகிழும்படி, கண்ணெதிரே காட்டும் சிறந்த அடையாளங்களாகத் திகழ்கின்றன.

—(தமிழாக்கம் ; ந. ரா. முருகவேள்)

# "தமிழகத்தின் திருக்கோவில்கள்"

## வண்ணத் திரைப்படம் பற்றிய பாராட்டியற் கருத்துக்கள்

(1)

''....இத்தகைய ஒரு வண்ணப் படமானது, தெற்காசியாவைப் பற்றி நாங்கள் கற்பிப்பதற்கு, அளவிட முடியாத மிகப் பெரும் மதிப்புடையதாக விளங்கும். எதிர்காலத்தில் இதனைக் காண்கின்ற எல்லோருக்கும், ஒரு பெரும் ஆனந்த அனுபவமாகவும் இது திகழும் என்று, நாங்கள் மனமார உணர்ந்து, மகிழ்வுடன் உடன்படுகின்றோம். இதன் படப்பிடிப்புக் கலை, சிறப்புற அமைந்துள்ளது. இதன் விளக்க உரை, மிக்க உதவியாகவும், அறிவுக்கு விருந்தாகவும் அமைந்துள்ளது. கோயிலைச் சார்ந்த கட்டிடக்கலை, வரலாறு, மற்றும் தொடர்புடைய கலைகள், விழாக்கள் ஆகிய எல்லாக் கூறுகளும், மிகச் சிறந்த முறையில், ''தமிழகத்தின் திருக்கோயில்கள்'' என்னும் இவ்வண்ணப்படத்தின் இரண்டு பகுதிகளிலும் தொகுக்கப்பெற்றுள்ளன. இஃது என்றும் மறக்கமுடியாத, மிக முக்கியமான கட்புல விருந்தாகவும், கட்புல ஆதாரச் சான்று ஆவணமாகவும் விளங்குகின்றது..''

பீட்டர் ரீவ்ஸ்,

தற்கால வரலாற்றின் பேராசிரியர், மேலை ஆஸ்திரேலியப் பல்கலைக் கழகம்—இயக்குநர், தெற்காசிய மற்றும் தென்கிழக்கு ஆசிய ஆராய்ச்சிமையம்—துணைத்தலைவர், இந்துமாக்கடற் கலைவிழாக்கள், பெர்த்.

8.10.79

(2)

''17 ஆண்டுகள் வெளிநாடுகளில் வாழ்ந்த பிறகு, கோயில்களும் விழாக்களும் பற்றிய தயாரிப்பில், நான் முழுவதாக ஈடுபடுத்தப்பட்டேன். இவ் வண்ணத் திரைப்படத்தின் கதை அல்லது விளக்க உரையானது, காலமுறையாகவும், நேர்த்தியாகவும் வழங்கப்பெற்றுள்ளது. ஆங்கில உரைவிளக்கம், விரைவின்றிப் போதிய அளவு மெல்லென நிகழ்த்தப்படுவதால், அயல்நாட்டார் எவரும் இதனை எளிதில் புரிந்துகொண்டு அனுபவிக்க முடியும்.''

எம். எஸ். உதயமூர்த்தி,

தமிழ் எழுத்தாளர்-இதழாளர்,

26.7.79 விஸ்கன்சின், அமெரிக்கா.

(3)

''தமிழகத்தின் திருக்கோயில்கள்'' பற்றிய இந்த இரண்டு வண்ணத் திரைப்படங்களும், மிகவும் சிறப்பாகவும், காண்பவர் உள்ளத்தில் மறக்க முடியாதபடி பதியக் கூடியனவாகவும், விளங்குகின்றன. படஅமைப்புமுறை,-கோயில்களை எடுப்பித்தவர்களின் சமய உணர்வு, மற்றும் வாழ்வியல் மனப்போக்கு என்பனவற்றை உணர்த்தக் கூடிய விளக்கவுரைநெறி, - ஆகிய இரண்டிலுமே, இவ்வண்ணத் திரைப்படம் மிகச் சிறப்பாக எழிலோங்கி அமைந்து விளங்குகின்றது....''

லியோனார்டு ஃபாலி,

பல்கலைக்கழக நூலகர்,

1.10.79 மேலை ஆஸ்திரேலியப் பல்கலைக் கழகம்.

(4)

''....எங்களுடைய குழு, புகழ்ஓங்கிய இந்தியப் பண்பாட்டு ஆராய்ச்சி அறிஞர்கள், எழுத்தாளர்கள், விஞ்ஞானிகள், வரலாற்று ஆசிரியர்கள், அரசியலாளர்கள் ஆகியவர்களைக் கொண்டது. நாங்கள் இங்குச் சென்னைக்கு வந்து, குறுகியகாலம்தான் தங்கினோம். ஆனால் மிகச் சிறிய அக்குறுகிய காலத்தில், பெரிதும் உணர்ச்சியூட்டுகின்ற சிறந்த மேலான அனுபவங்களை நாங்கள் பெற்றோம். ''தமிழகத்தின் திருக்கோயில்கள்'' என்னும் வண்ணத் திரைப்படங்கள், இந்திய வரலாறு, கலைகள் ஆகியவை பற்றிய முதன்மையான சிறந்த கூறுகளை, எங்களுடைய உள்ளத்தில் அழியா எழில் வண்ண உயிரோவியம்போல, முழுவதாக நன்கினிது பதியும்படி செய்தன என்று, நாங்கள் உறுதியாகச் சொல்லமுடியும். இத் திரைப்படங்கள், உருசியநாடு, மற்றும் பல நாடுகள் ஆகியவற்றின் மக்களிடமிருந்து மிகப்பெரிய பாராட்டுதலை, நிச்சயமாகப் பெறும் என்று, நாங்கள் திண்ணமாக நம்புகின்றோம்.''

எ. எ. நோரக்,
மாண்புமிகு நிதியமைச்சர்,
எஸ்டோனியன், எஸ்.எஸ்.ஆர்.

விளாடிமீர் ட்வனோவ்,
தலைமைப் பெருஞ்செயலாளர்,
சோவியத் இந்திய நேருபரிசளிப்புக்குழு

---

# "தமிழகத்தின் திருக்கோவில்கள்"

(வண்ணத் திரைப்படம்)

வெளியிடுவித்தோர் :

திரு. ஆணையர் அவர்கள்,
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை

&

திரு. இயக்குநர் அவர்கள்,
செய்தி விளம்பரத்துறை,
தமிழ்நாடு அரசு.

—(தமிழாக்கம் : ந. ரா. முருகவேள்)

---

## தமிழகக் கோயில்கள்

சிற்பம் ஓவம் இசைக்கூத்து, சிறப்பே மிக்க பிறகலைகள்,
பொற்பத் தழைத்தே ஆங்காங்கே புதுமை புனிதம் பேரழகு
பற்பல் நலங்கள் விளங்கநின்று, பண்டைத் தமிழர் பண்பாட்டின்
வெற்றித் தூணாம் கோயில்பல, மேவித் திகழும் தமிழ்நாடு! (1)

தூய நால்வர் பாடல்பெற்றுத் துரிசில் சோழர், பாண்டியர்கள்,
பாய கீர்த்திப் பல்லவர்கள், பலரும் பண்டு பணிசெய்யச்
சேய திசையும் புகழ்விளைத்துத் திகழும் சிறந்த சிவதலங்கள்,
ஆயம் கொண்டு போய்ப்பணிவோர், அவர்தாம் வாழ்வின் பயன்கொள்வோர்! (2)

பொங்குநற் பக்தி வெள்ளப் புணரியில் திளைத்து மூழ்கி,
நன்குயர் ஆழ்வார் கள்தாம், நலமிகப் பணிந்தி றைஞ்சி,
மங்களா சாச னம்செய் வைணவத் தலங்கள் யாவும்,
இங்குநாம் கண்டு போற்றல், இனியநற் கடமை ஆகும்! (3)

மனிதன் ஒருவன் எய்துதற்காம் வாழ்வின் இன்பம் பலவற்றுள்,
புனித நமது தமிழகத்திற் பொலியும், சைவ வைணவமாம்
இனிய தலங்கள், கண்டுதொழும் இன்பிற் சிறந்த தொன்றில்லை!
நனிநன் றுயர்ந்த அப்பேற்றை ,நலமே அடைய முயன்றுய்வோம்! (4)

—ந. ரா. முருகவேள்.

# தலைச்சங்க நாண்மதியப் பெருமாள்

டாக்டர் திரு ந. சுப்புரெட்டியார், M.A., Ph.D.

வைணவ சமயத்தில் எம்பெருமானைப் பற்றுதற்கு எல்லோருக்கும் எளிதான வழி பிரபத்தியாகும். பிராட்டியாரின் புருஷகார[1] பலத்தாலே எம்பெருமானிடம் தலையெடுக்கும் குணங்கள் வாத்சல்யம், சுவாமித்துவம், செளசீல்யம், செளலப்பியம், ஞானம், சித்தி என்பவையாகும்.

மேற்குறிப்பிட்ட ஆறனுள் முதலில் குறிப்பிட்ட நான்கு குணங்களும், சேதனன் இறைவனைப் பற்றுதற்கு மிகவும் துணை செய்யக் கூடியவை. இவற்றுள் வாத்சல்யம் என்பது, கன்றினிடத்தில் பசு இருக்கும் இருப்பு. சேதனனுடைய குற்றங்களையும் போக்கியமாய் (இன்பமாய்) கொள்வான் எம்பெருமான். இதனால் எம்பெருமானைப் பற்றவேண்டும் என்ற நினைப்புடன் நிற்கும் சேதனன் தன்குற்றம் கண்டு அஞ்சாமைக்கு இத் திருக்குணம் காரணமாய் அமைகின்றது. சுவாமித்துவம் என்பது, உடையானாக இருக்கும் இருப்பு. சேதனன் ஈசுவரனைக் கருதாமலும் நோக்காமலும் பராமுகமாயிருக்கும் நிலையிலும், ஈசுவரன் இவனை விடாமல் நின்று, இவனுடைய சொரூபத்தையே நோக்கிக் கொண்டு போவதற்குக் காரணமாகவுள்ள ஒரு தொடர்பே சுவாமித்துவம் ஆகும். சேதனன் உலகப்பற்றிலேயே இச்சைவைத்து உழன்று திரிகின்றான். இங்ஙனம் சேதனன் பயனற்றவழியில் தன் காலத்தைக் கடத்தினும் தன் உடைமையான இவனை அங்ஙனமே நலமற்ற வழியில் விட்டு விடுவதற்கு ஈசுவரனுடைய சுவாமித்துவமாகின்ற தொடர்பு இடந் தருதல் இல்லை. ஆதலின், அவன் தன் உடைமையான சேதனனை விடாது மறைந்திருந்து, பல நன்மைகளையும் விளைவிக்கின்றான். இதற்குக் காரணம் பகவானுக்கும் சேதனனுக்கும் உள்ள தொடர்பே யாகும். செளசீல்யம் என்பது, உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கை. இந்த செளசீல்யம் இருவகைப்படும். நித்திய விபூதி, லீலாவிபூதி இவற்றிற்குச் சுவாமியாய்ப் பெரிய பிராட்டியாரை முதல் துணைவியாய்க் கொண்டவனாய்த் தடை சிறிதுமற்ற சுவாதந்திரமாகிற தேஜஸை உடையவனாய் இருக்கும் பரமபதநாதன், தன் பெருமையையும் தன்னோடு கலக்கும் சீவான்மாவின் சிறுமையையும் நோக்காது, தன் பேறாக அவனுடன் புரையறக் கலத்தல் ஒரு வகை. சேதனன் விருப்பமின்றி இருப்பினும், பகவானே சென்று அவனோடு கலத்தல் மற்றொரு வகை. முன்னதற்குப் பாத்திரமானவர்கள் ஞானியர். பின்னதற்குப் பாத்திரமானவர்கள் நம்போலியரான சமுசாரிகள். செளலப்பியம் என்பது எளியனாயிருக்கும் இருப்பு. இது, கண்ணிற்குப் புலனாகாதிருக்கும் ஈசுவரன் தன் திவ்வியமங்கள விக்கிரகத்தைச் சேதனன் தன் கண்களாலே கண்டு பற்றுவதற்கேற்ப எளியனாயிருத்தல். இதனை,

> "குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்சல்யம்; காரியம் செய்யும்
> என்று துணிகைக்கு சுவாமித்துவம்; சுவாமித்துவம் கண்டு அஞ்சாமைக்கு
> செளசீல்யம்; கண்டு பற்றுகைக்கு செளலப்பியம்

என்று முமுட்சுப்படி குறிப்பிடும்.[2] "நிகரில் புகழாய்" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில்[3] இந்த நான்கு குணங்களையும் வெளியிடுவர் நம்மாழ்வார். ஸ்ரீவசனபூஷணமும்,

> "பிரபத்திக்கு அபேட்சிதங்களான செளலப்பியாதிகள், இருட்டறையில்
> விளக்குப்போலப் பிரகாசிப்பது இங்கே"[4]

என்று இத்திருக் குணங்களை விளக்கும். இருட்டறையில் விளக்குப் போலப் பிரகாசிப்பது இங்கே' என்றது, பரத்துவத்தில் இந்தத் திருக்குணங்கள் உளவாக இருக்கவும், எல்லாவற்றாலும் தன்னை ஒத்திருப்பவர்களான நித்திய முத்தர்கட்கு முகம் கொடுத்திருக்கின்ற இடமாகையாலே, பகல்விளக்குப்போன்று விளக்கம் அற்றிருக்கும்; அர்ச்சாவதாரமான இடத்தில் தண்மைக்கு எல்லை நிலமான இவ்வுலகமக்கட்கு முகம் கொடுத்துக் கொண்டிருக்கையாலே திணிந்த இருளிலே விளக்குப் போன்று மிக்க பேரொளியாகத் தோற்றும்.

நம்முடைய மனத்தில் இந்த எண்ணங்கள் குமிழியிடுகின்றன. நாமும் தலைச் சங்க நாண்மதியம் என்ற திருத்தலத்திற்குச் செல்ல எண்ணுகின்றோம். இத்திருத்தலம் மாயூரம் தரங்கம்பாடி தென்னிந்தியக் கிளைப் பாதையில் உள்ள ஆக்கூர் நிலையத்தினின்றும் மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது; இதே பாதையிலுள்ள செம்பனார் கோயில் நிலையத்தினின்றும் ஆறு கிலோ மீட்டர்

1. புருஷகாரம் - தகவுரை, சேர்ப்பிக்கும் தன்மை

2. முமுட்சுப்படி-138

3. திருவாய்மொழி-6. 10:10

4. ஸ்ரீவசனபூஷணம்-40

தொலைவிலுள்ளது. திருத்தலப் பயணிகள் செம்பனார் கோயில் நிலையத்தில் இறங்கி மாட்டுவண்டி அமர்த்திக் கொண்டு செல்வது நல்லது. நாம் மாயூரத்திலிருந்து ஆக்கூர் செல் லும் வழியிலுள்ள தலைச்சங்க நாண்மதியம் (அல்லது தலைச்சங்காடு) என்ற ஊரில் இறங்கு கின்றோம். ஊரிலிருந்து மேற்குத் திசையில் முக்கால் கிலோமீட்டர் தொலைவில் வயல் களுக்கு இடையேயுள்ள திருக்கோயிலுக்கு நடந்தே செல்லுகின்றோம்.

நடந்து செல்லுங்கால் ஊர்ப்பெயரின் ஆராய்ச்சியில் நம் மனம் ஈடுபடுகின்றது. இங் கிருந்து காவிரிப்பூம்பட்டினம் ஏழுகிலோமீட்டர் தொலைவிலுள்ளது. பழங்காலத்தில் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து சிறந்த சங்குகள் இங்கு விற்பனை செய்யப்பெற்றதால் இவ்விடத்தைத் தலைச்சங்கம் என்று வழங்கினர். இவ்விடத் தைச் சுற்றிலும் புரச (பலாச) மரக் காடாக இருந்தமையால் இவ்விடத்தைக் காடு என்றும் வழங்கினர். நாளடவில் இவ்விரண்டு பெயர் களும் சேர்ந்து 'தலைச்சங்கக் காடு' என்ற திருப்பெயராக வழங்கலாயிற்று. காலப்போக் கில் மக்கள் வாக்கில் இத்திருப்பெயர் மருவி, தலைச்சங்காடு என்ற பெருவழக்குப் பெற லாயிற்று. இவ்வூருக்கு அருகில் 'திருவெண்காடு' என்ற ஊரும் இருப்பதால் 'காடு' என்ற முடிவு பொருந்துவதாகக் கொள்ளலாம். திரு மங்கையாழ்வாரும் 'தலைச்சங்கம்' என்றே தம் திருப்பாசுரத்தில் குறிப்பிடுகின்றார்.

சிலப்பதிகாரக் குறிப்பும் நம் நினைவிற்கு வருகின்றது. அடைக்கலக் காதையில் வரும்,

''தாழ்நீர் வேலித் தலைச்செங் கானத்து
நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை
மாமறை முதல்வன் மாடலன் என்போன்
மாதவ முனிவன் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து
தமர்முதல் பெயர்வோன்''5

(வேலி - வேலியாகவுடைய; முற்றிய- முற்ற உணர்ந்த; நலம்புரி - நன்மையை விரும்பிய; கொள்கை - கோட்பாடு; மலை - பொதிய மலை; கொள்கையிற்படிந்து - முறைப்படி நீராடி; தமர்முதல் - கிளைஞர் இருக்கும் இடம்; பெயர்வோன்-மீண்டு வருவோன்)

என்ற அடிகளிலிருந்து இவ்வூரின்பெயர் 'தலைச் செங்கானம்' என்று மிகப் பழங்காலத்தில் வழங்கி வந்ததாகத் தெரிகின்றது. இவ்வூர்க் குடிமகனான மாடலன் என்னும் மறையோன் அகத்திய முனிவனின் பொதிய மலையை வலங் கொண்டு குமரியாற்றில் முறைப்படி தீர்த்த மாடித் தன் கிளைஞர் உள்ள இடமாகிய தலைச் செங்கானத்திற்கு மீண்டு வரும் செய்தி, இதில் குறிப்பிடப் பெற்றுள்ளது. இத்தலைச்செங்கா னமும் தலைச்சங்காடும் வேறு வேறு ஊர்கள் அன்று என்பதைச் சிலப்பதிகார அடிக் குறிப்பி னால் அறியலாம். எனவே, சிலப்பதிகார காலத் திற்கு முன்பிருந்தே இலக்கிய வழக்கும், இத் தலம் பெற்றுள்ளமை நன்கு புலனாகின்றது.

5. சிலப். அடைக். வரி.(11-16)

நாண்மதியப் பெருமாள் இடம் கொண் டுள்ள திருக்கோயில், ஊரின் மேற்குத் திசையில் உள்ளது. திருமங்கையாழ்வாரும் ''தண்ணார் தாமரைசூழ் தலைச்சங்கம் மேல்திசையுள், விண்ணோர் நாள் மதியை''6 என்று இத்திருக் கோயில் இருக்கும் திசையைக் காட்டுவர். 'நாள் மதியம்' என்ற இரண்டு சொற்கள் சேரும்போது (நாள் மதியம்) நாண்மதியம் என்றாகின்றது. 'முழுமதியம்' அல்லது பூர்ண சந்திரன் என்பது இதன் பொருளாகும். நம் மாழ்வாரும் மகள் பாசுரமாகச் சொல்லும் திரு வாய்மொழிப் பாசுரத்தில்,

''நைவாய எம்மேபோல்
நாள்மதியே! நீ இந்நாள்
மைவான் இருளகற்றாய்
மாழாந்து தேம்புதியால்''7

(நைவாய - நைந்து போதலையே இயல்பாக வுடைய; எம்மேபோல்-எம்மைப்போலவே; நாள்மதியே - பூர்ணச்சந்திரனே; மைவான்-கரிய ஆகாயம்; மாழாந்து - மயங்கி; தேம் புதி-குறைபடுகின்றாய்)

''நாள்மதியே'' என்று பூர்ணசந்திரனை விளிப் பதைக் காணலாம். எம்பெருமானைச் சூரிய னுடனும் சந்திரனுடனும் சம்பந்தப்படுத்தி, முன்னோர் போற்றியுள்ளதைப் பக்தி இலக்கி யங்களில் கண்டு களிக்கலாம். நம்மாழ்வாரும்,

''குழுமித் தேவர்குழாங்கள் கைதொழச்
சோதிவெள்ளத்தி னுள்ளே
எழுவதோர் உருவென்னெஞ் சுள்எழும்
ஆர்க்கும் அறிவரிதே''8

(குழுமி - நெருங்கி; சோதிவெள்ளம்-ஒளி யின்வெள்ளம்; எழுவது - எழுகின்ற; ஓர் உரு-ஒரு விக்கிரகம்; ஆர்க்கும்-எப்படிப் பட்டவர்க்கும்)

என்ற பாசுரப்பகுதியில் எம்பெருமானின் திறத்தை ''சோதிவெள்ளம்'' 'ஒளியின் வெள் ளம்' என்று குறிப்பிடுவதைக் காணலாம். அன்னை ஆண்டாளும், ''கதிர்மதியம் போல் முகத்தான்''?9 என்று எம்பெருமானைச் சூரிய யனையும் சந்திரனையும் போன்ற திருமுக மண்டலத்தையுடையவன் என்று பொருள்படும் படி பேசுவதைக் காணலாம். ஈண்டுத் திரு முகமண்டலத்தின் ஒளிக்குச் சூரியனும், குளிர்ச் சிக்குச் சந்திரனும் உவமையாக வந்துள்ளமை கண்டு மகிழத்தக்கது. மற்றும் இந்த அம்மை யார்,

''திங்களும் ஆதித்
தியனும் எழுந்தாற்போல்
அங்கண் இரண்டும்கொண்டு
எங்கள்மேல் நோக்குதியேல்''10

6. பெரியதிருமொழி 7.9:9
7. திருவாய்மொழி 2.1:6
8. திருவாய்மொழி 5.5:10
9. திருப்பாவை-1
10. ஷெ-22,

என்று அவன் திருக்கண்கள் இரண்டையுமே சூரியசந்திரர்களாகப் பேசுவதையும் கண்டு மகிழலாம். நாச்சியார் திருமொழியிலும் அம்மையார்,

''உதயப் பருப்பதத்தின்மேல்
விரியும் கதிரேபோல் வானை
விருந்தாவனத்தே கண்டோமே''10

(பருவதம் என்ற வடசொல் பருப்பதமாக வடிவு கொண்டது) என்று போற்றுவதைக் காணலாம். திருவுருவம் உதய பருவதமாகவும் திருமுக மண்டலம் சூரிய மண்டலமாகவும் உருவகிக்கப் பெற்றுள்ளமை கண்டு மகிழ்க.

இந்தச் சிந்தனைகளுடன் திருக்கோயிலுக்கு வந்து சேர்கின்றோம். திருக்கோயில் மிகச் சிறியது; மூலவருக்குக் கருவறை மட்டிலுமே உள்ளது. கருவறைக்கு முன்னர் ஒரு சிறு மண்டபமும் உள்ளது. எம்பெருமான் திருநாமம் நாண்மதியப் பெருமாள் என்பது; நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுகமண்டலங்கொண்டு சேவை சாதிக்கின்றார். தாயாருக்குத் தனிச் சந்நிதி இல்லை. தாயார் தலைச்சங்க நாச்சியார், செங்கமலவல்லித் தாயார் ஆகிய திருப்பெயர்களால் வழங்கப் பெறுகின்றார். உற்சவருக்கு வெண்சுடர்ப் பெருமாள் என்பது திருப்பெயர். கருவறைக்கு வெளியே, இவர் வெண்சுடர்ப்பெருமாள் என்ற திருநாமத்துடன் காட்சி தருகின்றார். இவர் பூரண சந்திர மண்டலத்தில் எழுந்தருளியிருப்பது குறிப்பிடத்தக்கது. இஃது வேறு எங்கும் காணப்பெறாத திருக்காட்சியாகும். இவர் பழங்காலத்து மூலவராக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகின்றது. இத்தலத்து மூலவர் சந்திரனது சாபந்தீர்த்தமையால், 'சந்திர சாபஹரர்' என்ற திருப்பெயராலும் வழங்கப் பெறுகின்றார். தமிழில் உள்ள நாண்மதியப் பெருமாள் என்ற திருப்பெயரை வடமொழியில் இங்ஙனம் மாற்றிவைத்தனரோ என்று எண்ணத் தோன்றுகின்றது.

இந்த எம்பெருமான் சந்நிதியில் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்தருளிய ஒரே ஒரு பாசுரத்தை மிடற்றொலிகொண்டு ஓதி உளங்கரைகின்றோம்.

''கண்ணார் கண்ணபுரம்
கடிகை கடிகமழும்
தண்ணார் தாமரைசூழ்
தலைச்சங்க மேல்திசையுள்
விண்ணோர் நாண்மதியை
விரிகின்ற வெம்சுடரை
கண்ணாரக் கண்டுகொண்டு
களிக்கின்றதிங் கென்று கொலோ''12

''நறுமணமும் குளிர்ச்சியும் பொருந்திய தாமரை மலர்களால் சூழப்பெற்ற தலைச்சங்காட்டின் மேல்திசையில் நித்திய சூரிகட்கு எந்நாளும் அனுபவிக்கத் தக்கவனான எம்பெருமான், இந்நிலவுலகில் எல்லோரும் வணங்கும்படி எளிதில் கிட்டுபவன் ஆனான். உதய காலத்தில் விரியும் சூரியனைப்போல மிக்கவனான அவனை இந்நிலத்தில் கண்கள் நிறைவு பெறுமளவும் கண்டு களிப்பெய்துவது என்றைக்கோ?'' என்று பெருமகிழ்ச்சி அடைகின்றார். இப்பெருமான் இந்த ஆழ்வாரின் உள்ளம் கவர்ந்தவராதலால் இவரது பெரிய திருமடலில் தன்நிலைமை எல்லாம் அறிவித்தற்கு உற்ற எம்பெருமான்களுள் ஒருவராக, ''நல் நீர்த் தலைச் சங்க நாண்மதியை''13 என்று குறிப்பிடுவதும் அறியத்தக்கது.

இப்பெருமானை மேற்குறிப்பிட்ட திருப்பாசுரத்தைக் கொண்டு சேவித்த பிறகு திவ்விய கவியின் அடியிற்கண்ட திருப்பாசுரத்தையும் சேவிக்கின்றோம்.

''செப்புங்கால் ஆதவனும்
திங்களும்வா னும்தரையும்
அப்புங்கா லும்கனலும்
ஆய்நின்றான்-கைப்பால்
அலைச்சங்கம் ஏந்தும்
அணியரங்கத்து அம்மான்
தலைச்சங்க நாண்மதியத்
தான்''14

(ஆதவன் - சூரியன்; திங்கள் - சந்திரன்; வான்-ஆகாயம்; தரை-பூமி; அப்பு-நீர்; கால்-காற்று; கனல்-நெருப்பு; ஆய்-ஆகி)

சராசரங்களாகிய யாவும் எம்பெருமானது திருமேனியே என்ற கருத்தைச் சிந்திக்கின்றோம். இந்த எம்பெருமானே ஐந்து பூதங்களாகக் காட்சி அளிப்பதாகத் திவ்யகவி கருதுகின்றார். இந்த எம்பெருமான் விலைமதிக்கவொண்ணாத திருச்சங்கைத் தலையணையாகக் கொண்டுள்ளதாக ஐதிகம். இங்ஙனம் எம்பெருமானின் மீது கொண்ட நிறைந்த அநுபவத்துடன் நம் இருப்பிடம் திரும்பும் நிலையில் இக் கோயில் பற்றிய சில குறிப்புகளையும் அறிகின்றோம்.

இந்தத் திவ்யதேசம் சுமார் முப்பத்தைந்து ஆண்டுகள்வரை உள்ளே செல்லவொண்ணாதபடி சுற்றிலும் சப்பாத்திச்செடி முளைத்துக் கிடந்தது; திருவாராதனமும் நடைபெறாது இருந்தது. அப்போது மிகவும் முதிர்ந்து தளர்ந்த வடுகநம்பி இராமாநுசதாசர் என்ற பெயர்கொண்ட சுவாமி ஒருவர், திருப்பணி செய்ய முன்வந்தார். அதனைத் தொடங்குமுன் அவர் காலமாகிவிட்டாராதலால், அவரது சீடராகிய சுந்தர இராமாநுசதாசர் என்பார் முன்வந்து, அத்திருப்பணியை அரும்பாடுபட்டு நிறைவு செய்தார். 1972ல்இதற்குக் குடமுழுக்கு விழாவையும் நிறைவேற்றுவித்தார். இந்தச் செய்தியையும் அறிகின்றோம். இந்நிலையில் மனநிறைவுடன் நம் இருப்பிடத்திற்குத் திரும்புகின்றோம். **

11. நாச்சியார்திருமொழி 14:16
12. பெரியதிருமொழி 8.9:9
13. பெரியதிருமடல்-கண்ணி
14. நூற்றெட்டுத்திருப்பதி அந்தாதி-13.

# தமிழ்நாட்டுக் கோயில்கள்

(கட்டிடக்கலையும், சிற்பக்கலையும்)

**முன்னுரை :**

தமிழ்நாடு கோயில்கள் நிறைந்தது. தமிழ் நாட்டிற் போல, இவ்வளவு மிகுதியான, வான ளாவி ஓங்கி உயர்ந்த, பழமையும் பெருமையும் மிக்க, மாபெரும் கோயில்களை, நாம் வேறு எங்கணும் காண்டல் இயலாது. கோயில்கள், நமது தமிழகத்தின் பழம்பெரும் நாகரிகத்தை யும், பண்பாட்டு நலன்களையும், விளக்கிக் கொண்டிருக்கும் அடையாளங்களாகத் திகழ் கின்றன. தமிழ்நாட்டுக் கோயில்கள், மிக்க பழமையும் பெருமையும் வாய்ந்து, அயல் நாட்டு அறிஞர் பெருமக்களின் உள்ளங்களையும் கவர்ந்து, கொள்ளைகொண்டு, பெரிதும் வியப் புறச் செய்து வருகின்றன.

தமிழ்நாட்டிற் பழங்காலத்தில் கோயில் களே கல்விநிலையங்களாகவும், கலைவளர்ச்சிக் கழகங்களாகவும், ஆவணக் களரிகளாகவும், நீதிமன்றங்களாகவும், அறச் சாலைகளாகவும், மருத்துவ மனைகளாகவும், தொழில்தரும் நிறு வனங்களாகவும், நிதிநிலையங்களாகவும், சமு தாய நல மன்றங்களாகவும் விளங்கி வந்தன. சமய இயல், சமுதாயஇயல், கலையியல், பண் பாட்டியல், பொருளியல் முதலிய எல்லாத் துறைகளிலும், தமிழக மக்களின் வாழ்க்கை யில், கோயில்கள் தலைமைச் சிறப்பிடம்பெற்று, நலம்பல விளைவித்து வருகின்றன.

**திருக்கழுக்குன்றம் :**

இந்தியாவில், தொலைவிலுள்ள இறந்த காலம், எப்பொழுதும் நிகழ்காலத்தின் அருகி லேயே இருப்பதாகத் தோன்றுகின்றது. இதோ தெரிவது திருக்கழுக்குன்றம் மலைக்கோயில். ''கண்ணுதலான் காதல் செய் கோயில் கழுக் குன்றம்'' என்று சம்பந்தர் இதனைப் பாடி யுள்ளார். இங்கு வேதங்களே மலைவடிவம் கொண்டிருக்க, அம்மலையின் உச்சியில் வேத கிரீசர் என்னும் பெயரில் இறைவன் எழுந்தருளி யுள்ளார். இவரையே ''கழுக்குன்றத்து உச்சி யாய்! கடவுளே! நின் பூவார்ந்த பொன் அடிக்கே போதுகின்றேன்'' என்று திருநாவுக் கரசர் போற்றுகின்றார்.

''சென்றுசென்று தொழுமின் தேவர்பிரான்இடம்,
கன்றினோடு பிடிசூழ் தண் கழுக்குன்றமே''

என்று சுந்தரர் பாடுகின்றார். ''பட்சி தீர்த்தம்'' என்னும் பெயரால், இக்கோயில் அனைத்திந் தியப் புகழ்பெற்றுள்ளது. நாள்தோறும் காலை யில் சுமார் 11 மணி அளவில், தொன்னெடுங் காலமாக நிகழ்ந்துவரும் ஓர் அற்புதத்தைக் காண்பதற்குத், திரளான மக்கள் இம்மலைக் கோயிலிற் கூடுகின்றார்கள். இரண்டு கழுகுகள் எங்கிருந்தோ வந்து, அர்ச்சகர் தரும் உணவை உட்கொண்டு செல்கின்றன. எவ்வளவு கால மாக இது நடைபெற்று வருகின்றது என்று, எவரும் அறியார். சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர், கி.பி. 1681-ஆம் ஆண்டு சூன்மாதம் 6-ஆம் தேதியன்று 'ஆவர்ட்' (Hovert) என் னும் டச்சுக்காரர் ஒருவர், இங்கு வந்து கழுகு கள் உணவு கொண்ட நிகழ்ச்சியினைத் தாம் நேரில் கண்டு வியந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். சுமார் 600 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந் திருந்த அருணகிரிநாதரும் ''கழுகு தொழு வேதகிரி'' என்று தம் திருப்புகழில் குறிப்பிட் டுள்ளார். இவ்விரண்டு கழுகுகளும் பூஷா, விதாதா என்னும் முனிவர்களின் அவதாரம் என்று, பாரம்பரியமாகச் சொல்லப்பெற்று வரு கின்றது.

**தலங்களின் மரங்கள் :**

காணவும் கருதவும் கூறவும் இயலாத ஒரு பெரும் சக்தி உண்டு என்றும், அதுவே கடவுள் என்றும், அக்கடவுளே இவ்வுலகின் தோற்றத் திற்கும் இயக்கத்திற்கும் காரணம் என்றும், பண்டைத் தமிழக மக்கள் கருதியுணர்ந்தனர். ''ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற்கு, ஆயி ரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட் டாமோ'' என்று மணிவாசகர் பாடுவது போல, எளிய சாதாரண பாமரமக்களும் ஓரளவு புரிந்துகொண்டு வணங்குவதற்காக, அக்கடவு ளுக்குப் பல பெயர்களும் வடிவங்களும் படைக் கப்பெற்றன. சிவபிரான் திருமால் அம்பிகை முருகன் முதலிய தெய்வங்கள், பல பெயர் களுடனும், பல வடிவங்களுடனும் வழிபடப் பெற்றனர். பழைய காலத்தில் ஒரு சில மரங் களையும் மக்கள் புனிதமுடையனவாகக் கருதிப் போற்றினர். பின்னர் அவற்றின்கீழ்ச் சில தெய்வப் படிமங்களை வைத்து, மக்கள் வழிபடத் தொடங்கினர். திருவொற்றியூரில் மகிழமரம், திருமயிலையில் புன்னைமரம், காஞ்சிபுரத்தில் மாமரம், சிதம்பரத்தில் தில்லை மரம், திருவானைக்காவில் வெண்நாவல்மரம், மதுரையில் கடம்பமரம் என்பன, இன்றும் புனிதத் தலமரங்களாகப் போற்றப்பெற்று வருகின்றன.

### கோயில்களின் தோற்றம் :

இன்றும்கூட, சுதையினால் செய்யப்பட்ட மிகப்பெரிய தெய்வப் படிமங்கள், மரத்தடிகளிலும் சோலைகளிலும் கிராம தேவதைகளாக வழிபடப்பெறுகின்றன. மழை வெயில் முதலியவற்றால் நேரும் இயற்கை அழிவுகளினின்றும், விலங்கு முதலியவைகளினின்றும், இத்தெய்வத் திருவுருவங்களைப் பாதுகாப்பதற்காக, மண்ணாலும் மரத்தினாலும் செங்கல்லினாலும் சுற்றுமதில்கள் அமைத்து, மேற்கூரைகளும் காலப்போக்கில் அமைக்கப்பெற்றன. இதுதான் கோயிற் கட்டிடக்கலையின் ஆரம்பமாகும். ''திருவாரூர்ப் பரவையுண் மண்தளி அம்மானே' எனவரும் தேவாரப் பாடல், கோயில்கள் முதன்முதலில் மண்ணால் அமைக்கப் பெற்றமைக்குச் சான்றாகும். குமரி மாவட்டத்தில் உள்ள பல கோயில்கள், இன்றும்கூட மரத்தாலும் செங்கல்லாலும் அமைந்திருத்தல் காணலாம். அவைகளின் கூரைகள், பிற்காலத்தில் உலோகத்தால் வேயப்பெற்றன. 6-ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் இத்தகைய அமைப்பு முறையிலேயே, கோயில்கள் இருந்து வந்தன. சிதம்பரத்தில் உள்ள கூத்தப் பெருமானின் கருவறை, மரத்தால் அமைக்கப்பெற்று, பொன்முலாம் பூசிய தகட்டு ஓடுகளால் கூரை வேயப்பெற்றுள்ளது.

மிகப் பழைய காலத்திலேயே கோயில்கள் கட்டுவதற்கும், தெய்வத் திருவுருவங்கள் அமைப்பதற்கும், விரிவான இலக்கணங்கள் வகுக்கப்பட்டிருந்தன. பண்டைக் காலத்தில் சிற்பிகள், கடுமையான ஒழுக்கக் கட்டுப்பாடுகளையும், விரதங்களையும் மேற்கொண்டு வந்தனர். ஒரு சிற்பி, தான் எந்த உருவத்தைச் செய்ய விரும்புகின்றாரோ, அத் தெய்வத்தின் உருவத்தை, அவர் பல நாட்கள் விரதம் இருந்து பக்தியுடன் தியானிப்பார். அங்ஙனமெல்லாம் விரதமிருந்து தியானித்து முயன்றால்தான், தாம் வடிக்க முயலும் தெய்வச் சிற்பத்தைச் சிறப்புற வடித்தல் இயலும் என்பது, சிற்பிகள் கருத்து. சுமார் 5000 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கண நூலிலேயே, கோயில்கள், தெய்வப் படிமங்கள் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

### குகைக் கோயில்கள் :

கி.பி.600-ஆம் ஆண்டில், தென்னிந்தியக் கோயிற் கட்டிடக்கலையில், ஒரு புதிய காலத் தொடக்கம் ஏற்படுவதாயிற்று. மண்டகப்பட்டு என்னும் இடத்தில், ஒரு பெரும் கருங்கற் பாறையில் குகைக்கோயில் ஒன்று, பிரமன் திருமால் சிவன் என்னும் மும்மூர்த்திகளுக்கும், முதல்முதல் குடைந்து அமைக்கப்பெற்றது. ''கல் மரம் உலோகம் சுண்ணாம்பு இல்லாமல்'' மகேந்திரவர்மன், இக் குகைக்கோயிலை முதன் முதலாக அமைத்தான். வல்லம் தளவானூர் பல்லாவரம் மாமண்டூர் மகேந்திரவாடி சீயமங்கலம் திருக்கழுக்குன்றம் திருச்சிராப்பள்ளி முதலிய இடங்களிலும், இத்தகைய குகைக் கோயில்கள், அவனால் அமைக்கப்பெற்றன.

### மாமல்லபுரம் :

சென்னைக்கு அருகில், மகாபலிபுரம் என்னும் மாமல்லபுரத்தில், ஏராளமான புடைப்புச் சிற்பங்களுடன், பல குடைவரைக் கோயில்கள் ஏற்படத் தொடங்கின. இதோ துர்க்கை, மகிஷாசுரன் என்னும் எருமைத் தலை அசுரனைக் கொல்லுகின்றாள். தீமையை அழித்து நன்மைபெறும் வெற்றியை இச் சிற்பம் குறிக்கின்றது. இதோ திருமால் பாம்பணையில் பள்ளிகொண்டுள்ளார். செல்வவளம் தரும் திருமகள், இங்கே காட்சி அளிக்கின்றாள். பூமி தேவியை மீட்கும் வராக அவதார மூர்த்தியின் சிற்பம், இங்கே அற்புதமாக அமைந்துள்ளது. இதோ திரிவிக்கிரமர் தன் திருவடியால் மூவுலகத்தையும் அளக்கின்றார். ''மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பா வகை முடியத் தாவிய சேவடி'' என்று, இளங்கோவடிகள் பாடுகின்றார். அதனை இச் சிற்பம் நம் கண்முன் கொணர்ந்து கவினுறக் காட்டுகின்றது. இதோ இங்கே ஒரு பெருங் காவியம் கல்லில் அமைந்துள்ளது. இச் சிற்பம் மலைப் பாறையில் ஒரு பக்கத்தில் செதுக்கப்பெற்றுள்ளது. சிவபெருமானிடமிருந்து பாசுபதம் என்னும் படையைப் பெறுவதற்கு விரும்பி, அருச்சுனன் தவம் புரிவதை, இச் சிற்பம் அழகுறக் காட்டுகின்றது. ஒரு சிலர் இதனைப் பகீரதன் தவம் என்றும் கூறுவர்.

கி.பி. 6-7-ஆம் நூற்றாண்டுகளில், இதே சமயத்தில், தமிழகத்தின் தெற்கே பாண்டிய மன்னர்களும்கூட, குகைக்கோயில்களை அமைக்க முற்பட்டனர். மதுரையை அடுத்த திருப்பரங்குன்றத்தில், நடனமாடும் சிவபெருமான், பார்வதிதேவி ஆகியோரின் அழகிய சிற்பங்கள் அற்புதமாக அமைந்துள்ளன.

### தேர்க்கோயில்கள் :

சற்றேறத்தாழக் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில், மகாபலிபுரத்தில் பல்லவ அரசர்கள் மற்றும் ஒரு புதுமையைப் படைத்தனர். ஒரு தனிப் பெரும் பாறைக்கல்லில் ஒரு பெரிய கோயில் முழுவதுமே குடைந்து அமைக்கப்பெற்றது. மாமல்லபுரத்தில் உள்ள தருமராசர்தேர் எனப் படும் கோயில், இவ்வகையில் அமைந்த மிகப் பெரிய கோயிலாகும். இது மூன்று அடுக்குகள் கொண்ட விமானத்தை உடையது. இரண்டாம் அடுக்கின் நடுவில் உள்ளிடம் வெட்டப்பட்டுள்ளது. அது மாடப்புரை போலச் சிறியது. அதன் அடியில் சோமாஸ்கந்தர் சிற்பம் செதுக்கப்பட்டிருக்கின்றது. பீமசேனன்தேர் என்னும் கோயில், நீள் சதுர அமைப்பில் உள்ளது.விமானத்தைச் சுற்றிலும் வழிவிடப்பட்டிருக்கிறது. மேலிடம் 45 அடி நீளம், 25 அடி அகலம், 26 அடி உயரம் கொண்டது. தூண்களின் அடியில் சிங்கங்கள் உள்ளன. அர்ச்சுனன்தேர் என்னும் கோயில், நான்கு நிலைகளையுடைய விமானம் கொண்டது. 11 சதுர அடி அமைப்புடையது. நான்காவதாக உள்ள கோயில், திரௌபதிதேர் என வழங்குகிறது. இது தமிழ் நாட்டில் ஊர்த் தேவதைகளுக்கு இருக்கும் சிறு கோயில் போல அமைந்துள்ளது. இதன்

அடித்தளம் 11 சதுர அடி. உயரம் 10 அடி. இதில் உள்ள துர்க்கையின் சிலை, வேலைப் பாடு மிக்கது. பல்லவர் காலத்துச் சிற்பத் திற னையும், அறிவையும் இது நன்கு விளக்குகின் றது. ஐந்தாவது, சகாதேவன்தேர் என்னும் கோயில்! இது பின்புறத்தில் யானையின் முது கைப் போன்றுள்ளது. பண்டைப் பௌத்தர் களின் சயித்தியத்தை ஒத்துக் காணப்படுகின் றது. ஒரே கல்லில் அமைந்த இந்த ஐந்து கோயில்களும், தேர்கள் அல்லது ரதங்கள் என்று வழங்கப்படுகின்றன. இவைகள், பல்ல வர் காலத்தில் நிலவியிருந்த கட்டிடக் கலை யின் அமைப்புக்களைப் புலப்படுத்துகின்றன.

**கழுகுமலை :**

பாண்டிய மன்னர்களும்கூட, இம்மாதிரி முறையில், கோயில்கள் கட்டத் தொடங்கினர். கழுகுமலை என்னும் இடத்தில், மலையின் ஒரு பகுதி, தனியே பிரிக்கப்பட்டு, ஒரே கல்லில் அமைந்த கோயிலாகக் குடையப்பெற்றுள்ளது. இவ்வேலை முற்றுப் பெறவில்லை. வடிவ அமைப்பாலும், வேலைப்பாட்டின் நுணுக்கத் தினாலும், இது தென்னிந்தியாவின் எல்லோரா என்று புகழ்ந்து போற்றப்படுகின்றது.

**கடற்கரைக் கோயில் :**

மாமல்லபுரத்தில் உள்ள கடற்கரைக் கோயில், இதற்கு அடுத்த வளர்ச்சி நிலையி னைக் குறிக்கின்றது. இக்கோயிலைக் கட்டிய வன், கி.பி. 666 முதல் 705 வரையில் காஞ்சி புரத்திலிருந்து அரசாண்ட இராசசிம்ம பல்லவ னாவான். இவனே காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயில், ஐராவதேசுவரர் கோயில், பனை மலைக் கோயில் ஆகியவற்றைக் கட்டினான். மாமல்லபுரத்தில் வராக மண்டபக் குன்றின் மீதுள்ள ''உலகக்கண் ஈசுவரர்'' கோயிலும், இராசசிம்மன் அமைத்ததே யாகும். மாமல்ல புரம் கடற்கரைக் கோயில், கருங்கற்களை அடுக்கிக் கட்டிடம் ஆக்கும் முறையில் அமைந் தது. இக்கோயில் ஆறு அடுக்குகளைக் கொண்ட விமானத்தை உடையது. இதில் உள்ளறை ஒன்றே உள்ளது. அதனைச் சுற்றித் திருச்சுற்று என்னும் பிராகாரம் அமைந்திருக்கின்றது. அத் திருச்சுற்றில், ஒன்பது சிறிய சந்நிதிகள் உள் ளன. சுமார் 1200 ஆண்டுகளாக, இக்கோயி லானது கடல் அலைகளையும், காற்றின் மோதல்களையும் எதிர்த்து நின்று தாங்கி வரு கின்றது. கருவறையின் மேலுள்ள விமானம் இதில் முதன்மை பெற்றுள்ளது. பக்தர்கள் கோயிலைச் சுற்றி வலம் வருவதற்கு வழி அமைக்கப்பெற்றிருத்தல், இக்கோயிலிற் காணும் ஒரு சிறந்த புதிய முறை எனலாம். கோயில் வழிபாட்டில் இது ஒரு முக்கியமான கூறு ஆகும்.

**கயிலாசநாதர் கோயில் :**

காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயில், தமி ழகக் கோயிற் கட்டிடக் கலையில் மிகவும் புகழ்வாய்ந்தது. கோயில் வாயில் சிறியது. கோயில் நீள் சதுரமாக இருக்கின்றது. கோயில் நுழைவாயிலின்மீது, கோபுரம் என்னும் கூடு தல் அமைப்பு ஒன்றுள்ளது. பிற்காலக் கோயில் களில் இதுவே ஒரு முக்கிய அமைப்பாகச் சிறப் பிடம் பெற்றுவிட்டது. கருவறையைச் சுற்றி லும் பரிவார தேவதைகளுக்குச் சிறுசிறு சந் நிதிகள் உள்ளன. பிராகாரம் என்னும் திருச் சுற்றை அடுத்து, கோவில் மதிற் சுவரின் உட் பக்கம் முழுவதும் 58 சிறுசிறு புரைக் கோயில் கள் உள்ளன. இக்கோயில், உறுதியான கருங் கல்லினால் அன்றி, மென்மையான மணற்கல்லி னால் கட்டப்பெற்றுள்ளது. இங்குள்ள சிற்பங் கள் சிறந்த வேலைப்பாடு மிக்கவை, வியந்து போற்றத் தக்கவை. கயிலாசநாதர் கோயில், இமயமலையின்கண் உள்ள 'திருக்கயிலையின் அளவைக்கொண்டே கட்டப்பட்டது' என்று விபுலானந்த அடிகள் போன்ற சான்றோர்கள் கூறுவர்.

**வைகுண்டப் பெருமாள் கோயில் :**

காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயிலும், அதற்கு நேர் எதிரே கிழக்கில் அமைந்துள்ள ''பரமேச்சுர விண்ணகரம்'' என்னும் வைகுண் டப்பெருமாள் கோயிலும், பல்லவர் காலத்துச் சிற்பக்கலையின் முழு நிறைவான உச்சநிலையை அடைந்து காணப்படுகின்றன. காஞ்சிபுரம் வைகுண்டப்பெருமாள் கோயிலைக் கட்டியவன் கி.பி. 705 முதல் 710 வரை அரசாண்ட இரண் டாம் பரமேசுவர வர்மன் என்னும் பல்லவ மன்னன் ஆவான்.

> ''பல்லவன் வில்லவன் என்றுலகில்
> பலராய்ப் பலவேந்தர் வணங்குகழல்
> பல்லவன் மல்லையர்கோன் பணிந்த
> பரமேச்சுர விண்ணகரம் அதுவே''

என்று திருமங்கையாழ்வார், இக்கோயிலைப் பாடியுள்ளார். காஞ்சிபுரம் வைகுண்டப்பெரு மாள் கோயிலில் உள்ள வரிசை வரிசையான சிற்பங்கள், அக்கால நிலையைப்பெரிதும் விளக் குகின்றன. இரண்டாம் பரமேசுவர வர்மனுக் குப் பின்னர்க் கி.பி. 710 முதல் 770 வரை அரசாண்ட இரண்டாம் நந்திவர்மன் பட்டத் திற்கு வந்த வரலாற்று நிகழ்ச்சிகள், இங்குச் சிற்பங்களாக வடிக்கப்பெற்றுள்ளன.

**கும்பகோணம் கோயில்கள் :**

சுமார் கி.பி. 850ஆம் ஆண்டுமுதல், கோயில்களின் பொற்காலம் தொடங்கியது. அக்காலத்தில் சோழப் பேரரசர்கள், தஞ்சை மாநகரிலிருந்து அரசாளத் தொடங்கினர். அவர்களின் ஆட்சி 200 ஆண்டுகளுக்கு மேல் நிலை பெற்றிருந்தது. சோழப் பேரரசர்கள் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள பழை யாறை என்னும் இடத்தைத் தம் தலைநகரங் களுள் ஒன்றாகக் கொண்டிருந்தனர். இப்போ தும் 'சோழன் மாளிகை' என்னும் பெயரில் அங்கு ஓரிடம் இருத்தல் காணலாம். தமிழகத் தின் பழம்பெரும் நகரங்களுள், கும்பகோணம் ஒன்று. அது சங்ககாலம் முதலே புகழ்பெற்றுச் சிறந்து விளங்கியிருந்தது எனத் தெரிகின்றது.

பல்லவர் (கி.பி. 300-900), சோழர் (கி.பி. 900-1300), நாயக்க மன்னர்கள் (கி.பி.1600-1700) ஆகியோர் பலர், கும்பகோண நகரத்தின் வளர்ச்சிக்கும் சிறப்பிற்கும் பெரும் பணியாற்றியுள்ளனர். ''கோயில்கள் நிறைந்தது கும்பகோணம்'' என ஒரு பழமொழி உண்டு. அதன்படி இந்நகரத்தின் பற்பல கோயில்கள் பொற்புற அமைந்து விளங்குகின்றன. கும்பகோணம் நகரத்தின் நடுவே கும்பேசுவரர் கோயில் அமைந்துள்ளது.

''பூமருவும் கங்கைமுதல்
புனிதமாம் பெருந்தீர்த்தம்,
மாமகம்தான் ஆடுதற்கு
வந்துவழி படுங்கோயில்''

என்று இதனைப் பெரியபுராணத்தில் சேக்கிழார் சிறப்பித்துப் பாடியுள்ளார். அப்பரும் சம்பந்தரும் இதனைப் பாடியுள்ளனர். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இங்கு நடைபெறும் மகாமகப் பெருவிழாவில், கும்பசேுவரர் கோயில் முதன்மையிடம் பெறுகிறது. இக்கோயிலின் நீளம் 750 அடி. அகலம் 250 அடி. மொத்தப்பரப்பு 187500 சதுர அடி என்பர். இதன் முதன்மைக் கோபுரம் 128 அடி உயரமுடையது. இங்கு நவராத்திரி மண்டபம் என்னுமிடத்தில், ஒரே பெருங்கல்லில் 27 நட்சத்திரங்களும், 12 இராசிகளும் அழகுறச் செதுக்கப்பட்டுள்ளன. கருங்கல்லில் செய்யப்பட்டுள்ள அற்புதமான பழமை மிக்க நாதசுரங்கள் இரண்டு, இக்கோயிலில் உள்ளன. 'குடந்தைக் கீழ்க்கோட்டம்' என அப்பர் குறிப்பிடும் கோயில், இப்போது நாகேசுவரர் கோயில் என வழங்குகின்றது. இங்கு ஆதிசேடன் வழிபட்டு அருள்பெற்றான் என்பர். இத்தலத்தில் சூரியனும் வழிபட்டு அருள் பெற்றான். அதன் அடையாளமாக இப்பொழுதும் சித்திரை மாதம் 11,12,13 தேதிகளில் சூரியனின் ஒளி இங்குள்ள சிவலிங்கத்தின்மீது படிதலைக் காணலாம். ''குடந்தைக் கீழ்க் கோட்டத்து எம் கூத்தனார்'' என அப்பர் குறிப்பிடும் கோயில், இங்கு ஒரு சந்நிதியாக உள்ளது. இது தேர் வடிவத்தில், யானைகள் முயன்று இழுப்பது போல அமைக்கப்பெற்றுள்ளது. இங்குள்ள அர்த்த நாரீசுவரர், பிட்சாடனர் சிற்பங்கள் கலைத்திறனும் கனினும் மிக்கவை. ''குடந்தைக் காரோணம்'' என்னும் கோயில், மகாமகத் தீர்த்தத்திற்கு வடகிழக்குப் பகுதியில் அமைந்து, இப்போது காசிவிசுவநாதர் கோயில் என வழங்குகின்றது.

கும்பகோணத்தில் இவைகளேயன்றி, சோமேசர் கோயில், நாளிகேரேசர்கோயில், யக்ஞஉபவீதஈசர் கோயில், பாணபுரேசர் கோயில், மாலதிவனேசர் கோயில், கயிலாசநாதர் கோயில் எனப்பல சிவாலயங்களும் , சாரங்கபாணிகோயில், சக்கரபாணிகோயில், வரதராசப்பெருமாள்கோயில், இராமசாமி கோயில் எனப் பல பெருமாள்கோயில்களும் உள்ளன. சாரங்கபாணிகோயிலில் உள்ள பெருமாளுக்கு ஆராவமுதர் என்பது பெயர். இக்கோயில் பல்லவர் காலத்தது. நாயக்க மன்னர்கள் இதற்குத் திருப்பணி செய்தனர். இதன் கோபுரம் 146 அடி உயரமும், 12 நிலைகளும் உடையது. கும்பகோணம் ஐயன்கடைத் தெருவின் தெற்குமூலையிலுள்ள இராமசாமி கோயிலில்,இராமாயண வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட அழகிய பல சிற்பங்கள் நிறைந்துள்ளன. தஞ்சாவூரை ஆண்ட அச்சுதப்பநாயக்கர் (கி.பி. 1572-1614), இரகுநாதநாயக்கர் (கி.பி. 1614-1640) என்பவர்களின் காலத்தில் இக்கோயில் கட்டப்பெற்றது. கும்பகோணத்தில் உள்ள தீர்த்தங்கள் பலவற்றில், நகருக்கு நடுவே இருபது ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள மகாமகக் குளம், பெரிதும் சிறப்பு வாய்ந்தது. இதன் கரையில் நாற்றிசைகளிலுமாக 16 மண்டபங்கள் அல்லது சிறுகோயில்கள் அழகுற அமைந்துள்ளன.

**தஞ்சைப் பெரிய கோயில் :**

இக்காலத்தின் மிகப்பெரிய கலைப்பெருஞ்சின்னம், சோழப் பேரரசர்களில் தலைசிறந்தவனாகிய, முதலாம் இராசராச சோழனால், 11-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கட்டப்பெற்ற, தஞ்சைப் பெருவுடையார் கோயிலாகும்.

''மின்நெடும் புருவத்து இளமயில் அனையார்
விலங்கல்செய் நாடக சாலை
இன்நடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரம்''

என்று, கருவூர்த்தேவர் திருவிசைப்பாவில், தஞ்சைப் பெரியகோயிலின் சிறப்பினைப் புகழ்ந்து பாடியுள்ளார். இக்கோயில், கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், ஸ்நபனமண்டபம், நர்த்தனமண்டபம், வாத்தியமண்டபம் என்னும் ஆறு பகுதிகளை உடையது. கோயிலின் உள்ளே உள்ள 7 வாயில்களிலும், 18அடி உயரமும், 8 அடி அகலமும் உள்ள 7 துவாரபாலகர்கள் நிறுவப்பட்டுள்ளனர். கோயிலின் வெளிப்புற நீட்டளவு 793 அடி. குறுக்களவு 397 அடி. செங்கல் பரப்பப்பட்டுள்ள உட்புறப் பரப்பு 500 அடிநீளமும், 250 அடி அகலமும் உடையது. கோயிலின் விமானத்திற்கு எதிரில் அமைந்துள்ள நந்தியின் திருவுருவம் 12 அடி உயரமும், 19 அடி நீளமும், 8 அடி அகலமும் உடையது. இஃது ஒரே கல்லில் செதுக்கப்பெற்றது. மிகப்பெரியது!

இக்கோயில் அடிநிலை முதல் தூபிவரை, யாவும் கருங்கற்களாலேயே முழுவதும் இயன்றுள்ளது. கோயிலின் கருவறைக்கு மேலேயுள்ள அழகிய விமானம், 13 நிலைகள் கொண்டது. தட்சிணமேரு என்னும் இச் சிறந்த விமானம், 216 அடி உயரம் உள்ளது. இதன்மேல் உள்ள செப்புக்குடம் 3083 பலம் நிறையுடையது. அதன்மேல் போர்த்துள்ள பொன்தகடு 2926 கழஞ்சு அளவுடையது. விமானத்தின் உச்சியில் வியக்கத்தக்கவகையில் ஏற்றிவைக்கப்பெற்றுள்ள பிரமரந்திரத் தளம், ஒரு தனி முழுப் பெரும் கருங்கல் ஆகும். அது 25 அடி சதுரம், 80 டன் நிறைகொண்டது. சதுரக் கல்லின் நான்கு மூலைகளிலும் முறையே இரண்டிரண்டு நந்திகள் உள்ளன. அவைகள் தனித்தனியே 6 அடி நீளமும், 5 அடி அகலமும் கொண்டவை.

இக்கோயிலின் கட்டிடத்திற்குரிய மாபெருங் கருங்கற்கள் அனைத்தும், நெடுந் தொலைவிலிருந்தே கொண்டுவரப் பட்டிருக்க வேண்டும். ஏனெனில் தஞ்சை மாவட்டத்தில் மலைகள் எதுவுமே இல்லை. இக்கோயிலின் அழகிய உயரிய விமானமானது, இடைக்காலத்திலிருந்த தமிழ்நாட்டுப் பொறியியல் வல்லுநர்களின் ஆற்றல் மிக்க, ஓர் அரும்பெரும் சாதனையாகும். கருவறையைச் சுற்றியுள்ள சிறு பிராகாரத்தின் முதல் அடுக்கில், நடனமாடும் சிவபெருமானின் சிற்பங்கள் அமைந்துள்ளன. அவைகள் பரதமுனிவர் இயற்றிய நாட்டிய சாத்திரம் கூறும் நடனக்கலையின் பலவேறு கரணங்களை எழில்மிகக் காட்டுகின்றன. தெய்வங்கள் தேவதைகள் ஆகியவற்றின் திருவுருவச் சிற்பங்கள், இக்கோயிலில் ஏராளமாக உள்ளன. கோயிற் சுவர்களின் அடிப்பகுதியில், பழைய தமிழ்க் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவைகள் இக்கோயிலுக்கு அளிக்கப்பெற்ற,பல வகையான நன்கொடைகளையும், அறக்கட்டளைகளையும் விரிவாக விளக்குகின்றன. இக் கல்வெட்டுக்கள் வரலாற்று ஆராய்ச்சிக்கு மிகவும் முக்கியமான ஆதாரங்களாகத் திகழ்கின்றன.

**கங்கைகொண்ட சோழபுரம் கோயில்:**

கங்கைகொண்ட சோழபுரம் கோயில், இராசராசசோழனின் புதல்வனாகிய இராசேந்திர சோழனால் கட்டப்பெற்றது. இராசேந்திரசோழன் கி.பி. 1012 முதல் கி.பி.1044 வரை அரசாண்டான். வடநாட்டிற்குப் படை எடுத்துச் சென்று, கங்கைநதி வரையிலுள்ள பல நாடுகளை வெற்றிகொண்டு கைப்பற்றிய பேரரசன் ஆதலின், இவனுக்குக் கங்கைகொண்ட சோழன் என்னும் சிறப்புப் பெயர் ஏற்பட்டது. தன் வடநாட்டு வெற்றிக்கு அறிகுறியாகத் திருச்சிராப்பள்ளி மாவட்டம், உடையார்பாளையம் வட்டத்தில், இராசேந்திரசோழன், கங்கைகொண்டசோழபுரம் என்னும் நகரத்தை அமைத்து, அதனைத் தலைநகராகக்கொண்டு அரசாண்டான். இப் பண்டைய நகரம் சுமார் 4 மைல் சதுர அமைப்புடையதாய், பெரிய மதில்களால் சூழப்பட்டு, அகத்தே பல மாடமாளிகைகளைக் கொண்டிருந்தது. இப்போது இவ்வூர் பாழ்பட்டிருப்பினும், இங்குள்ள கோயில் இந்நகரின் பண்டைப் பெருமையினை விளக்கிக்கொண்டிருக்கின்றது.

கங்கைகொண்ட சோழபுரம் கோயிலின் விமானத்தின் அடித்தளம் 100 அடி சதுரமும், 20 அடி உயரமும் கொண்டது. இதில் பற்பல சிற்ப விசித்திரங்கள் அமைந்துள்ளன. கோயிலின் மூலக்கருவறை 35 அடி உயரத்தில் அமைந்துள்ளது. உட்பிராகாரம் 10 அடி அகலம். கர்ப்பக்கிரகத்தில் 13 அடி உயரம், 20 அடி சுற்றளவுள்ள சிவலிங்கம், 13 அடி உயரமும் 45 அடி சுற்றளவும்கொண்ட ஆவுடையார் மேல் பொருத்தப்பெற்றுள்ளது. விமானத்தின் உயரம் 190 அடி. அதன் முன்னுள்ள பெரிய மண்டபம்175 அடி நீளமும், 35 அடி அகலமும் கொண்டது. மகாமண்டபத்தின் உள்ளே பல அரிய சிற்பங்கள் உள்ளன. அவற்றில் சம்பந்தர் உருவமும், சூரிய பீடமும் குறிப்பிடத்தக்கவை. சூரியபீடம் ஒரு தேர் வடிவில் உள்ளது. தேர்த் தட்டின் நடுவில் சூரியன் விளங்குகின்றான். ஏழு குதிரைகள் பூட்டப்பெற்றுள்ள அருணன் என்னும் சாரதி, தேர் ஓட்டுகின்றான். இங்குள்ள திரிபுராந்தகர், நடராசர், கங்காதரர். சிற்பங்கள் மிகமிகச் சிறப்பு வாய்ந்தவை.

அண்டர் பிரானும் தொண்டர் தமக்கு
அதிபன் ஆக்கி, அனைத்தும்நாம்
உண்ட கலமும் உடுப்பனவும்
சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம்
என்றங் கவர்பொன் தடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை
மாலை வாங்கிச் சூட்டினார்.

எனவரும் பெரியபுராணச் சொல்லோவியத்திற்கு, மூலமும் ஆதாரமும்போல இக்கோயிலிலுள்ள 'சண்டேச அனுக்கிரகர்' என்னும் திருவுருவம், மிகச் சிறந்த பேரெழிலுடன் விளங்குகின்றது. இவ்வழகிய சிற்பத்தைக் கண்டு வியந்ததன் விளைவாகவே, பின்னர் வந்த சேக்கிழார் பெருமான் மேற்குறித்த பாடலைப் பாடியருளினார். இங்குள்ள திருக்காமக்கோட்டம் என்னும் அம்பிகைகோயில், இராசேந்திர சோழன் கட்டியதேயாகும். இவன் காலத்திலிருந்தே அம்பிகைக்குத் தனிக்கோயில் அமைக்கும் முறை ஏற்பட்டது. தமிழகத்தில் முதல் முதல், விமானம் அகமண்டபம் முகமண்டபம் திருக்காமக்கோட்டம் திருச்சுற்றுமாளிகை திருமதில் கோபுரங்கள் முதலிய அனைத்தும் ஒரே காலத்தில் கட்டப்பட்ட பெருங்கோயில், இக்கோயிலே யாகும். இதற்கு மாறாகச் சிதம்பரம், திருவரங்கம் போன்ற பெரிய கோயில்கள், தொடக்கத்தில் மிகச் சிறியனவாக இருந்து, பின்னர் அவ்வப்போது ஆண்ட மன்னர்களால் காலப்போக்கில் கட்டப்பெற்ற பரிவாரக் கோயில்கள், மண்டபங்கள், கோபுரங்கள் முதலியவற்றால், பல நூற்றாண்டுகளில் பெருகி வளர்ந்தவையாகும்.

கங்கைகொண்ட சோழபுரம் கோயில், இராசராசன் எடுப்பித்த தஞ்சைப் பெரிய கோயிலையே பெரும்பாலும் ஒத்துள்ளது. தஞ்சைப் பெரிய கோயிலைவிட இது உயரத்தில் சிறியது. ஆனால் சிற்ப நுணுக்கங்களில் மிக விரிவும் வேலைப்பாடும் கொண்டது.

அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டே?
அன்பொடு தன்னை அஞ்செழுத்தின்
சொற்பதத் துள்வைத்து உள்ளம் அள்ளூறும்
தொண்டருக்கு எண்டிசைக் கனகம்,
பற்பதக் குவையும் பைம்பொன் மாளிகையும்
பவள வாயவர் பணைமுலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாம் கங்கை
கொண்ட சோழேச் சரத்தானே!

என்று இக்கோயிலிலுள்ள பிருகதீசுவரர் என்னும் பெருவுடையாரின் அருள்நலத்தைக் கருவூர்த்தேவர், திருவிசைப்பாவில் கன்மனமும் கரையப் பாடுகின்றார்.

**தாராசுரம்:**

கும்பகோணத்திற்கு அருகில், தாராசுரம் என்னும் ஓர் ஊர் உள்ளது. இராசராசபுரம் என்னும் பெயரே, தாராசுரம் என இப்போது மருவித்திரிந்து வழங்குகின்றது. கி.பி.1146 முதல் 1163 வரையில் அரசாண்ட இரண்டாம் இராசராசன், தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலைக் கட்டினான். கி.பி. 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இக்கோயிலின் தூண்களில் நுணுக்கமாக வடிக்கப்பெற்ற சிற்ப வேலைப்பாடுகளை மிகுதியாகக் காணலாம். யானையின் தோலை உரிக்கும் கஜசம்மார மூர்த்தியின் சிற்பம், இங்கே உயிர்ப்பும் பொலிவும் பெற்று விளங்குகின்றது. இராவணன் கயிலையை எடுக்கும் காட்சி அற்புதமாக அமைந்துள்ளது. கருப்பக் கிருகத்தின் புறச் சுவரில், பெரியபுராணம் கூறும் அறுபத்துமூன்று நாயன்மார்களின் வரலாறுகள், சிறிய அளவில் அழகியமுறையில் இங்குச் சிற்பங்களாக வடிக்கப்பெற்றுள்ளன. இஃது இக்கோயிலின் தனிப்பெருஞ் சிறப்புகளில் ஒன்றாகும்.

**சிதம்பரம்:**

சிதம்பரத்தில் உள்ள நடராசர் கோயில், 12-13 நூற்றாண்டுகளின் கட்டிடக்கலையில் புதிய வளர்ச்சி நெறியின் போக்கினைப் புலப்படுத்துகிறது. சைவர்களுக்குக் 'கோயில்' என்றால் அது சிதம்பரம் நடராசர் கோயிலையே குறிக்கும். ஒரு சிறந்த பெருங்கோயிலுக்குத் தீர்த்தம் தலம் மூர்த்தம் என்னும் மூன்றுவகையான சிறப்புக்களும் அமைந்திருத்தல் வேண்டும் என்பர். பல கோயில்களுக்கு இவற்றில் ஒன்று அல்லது இரண்டு மட்டுமே அமைந்திருக்கும். சிதம்பரம் கோயிலில் இம் மூன்றுமே சிறப்புற அமைந்திருக்கின்றன. ''தீர்த்தம் என்றால், சிதம்பரம் நடராசர் கோயிலிலுள்ள சிவகங்கை என்னும் திருக்குளமே. தலம் என்றால் புலியூர் என்னும் சிதம்பரமே. தெய்வத் திருவுருவம் ஆகிய மூர்த்தம் என்றால், சிதம்பரம் நடராசர் வடிவமே.'' இதனை,

''தீர்த்தம் என்பது சிவகங் கையே!
ஏத்தரும் தலம் எழிற்புலி யூரே!
மூர்த்தி அம்பலக் கூத்தனது உருவே!''

என்று, குமரகுருபரர் குறிப்பிடுதல் காணலாம்.

இக்கோயில் நடராசப் பெருமானுக்கே தனிச் சிறப்பாக உரியது. இங்கு நடராசப் பெருமானுக்கு ஐந்து சபைகள் உண்டு. அவைகள் முறையே சிற்சபை, இராசசபை, கனகசபை, நிருத்தசபை, தேவசபை எனப்படும். நடராசப்பெருமான் இருக்குமிடம் சிற்சபை; ஆயிரக்கால் மண்டபம் இராசசபை; சிற்சபைக்கு முன்னால் அமைந்துள்ளது கனகசபை; கொடிமரத்திற்கு அருகில் மிகவும் அற்புதமான சிற்ப வேலைப்பாடுகளுடன் அமைந்திருப்பது நிருத்தசபை; பேரம்பலம் என்பது தேவசபை. இக்கோயில், தத்துவக் கருத்துக்களை விளக்கும் முறையில் அமைந்துள்ளது. நான்கு வேதங்கள் நான்கு கோபுரங்கள்; ஆயிரக்கால் மண்டபம், நம் உடலின் தலைக்குமேல் உள்ள சகஸ்ராரம் என்னும் ஆயிரம் இதழ்த்தாமரை. சிவகங்கைத் தீர்த்தம், சகஸ்ராரம் என்பதை அடுத்துள்ள அமிழ்தப் பொய்கை. சிற்சபையில் உள்ள நான்கு கம்பங்கள், நான்கு வேதங்களின் அதி தெய்வங்கள். அடுத்துள்ள 28 நெடுந்தூண்கள், 28 ஆகமங்கள். 96 பலகணிகள், நம் உடலிலுள்ள 96 தத்துவங்கள். விமானத்தின் 9 கலசங்கள், நவசக்திகளின் அடையாளம். விமானத்தின் 64 கழிகள், 64 கலைகள். கனக சபையில் வேயப் பெற்றுள்ள பொன்னோடுகள் 21600, அவைகள் நாளொன்றுக்கு நாம் விடும் 21600 சுவாச மூச்சுகளை உணர்த்துகின்றன. பொன் ஓடுகளின்மீது உள்ள ஆணிகள் 72000. அவைகள் நம் உடலிலுள்ள 72,000 - நாடிகளைக் குறிக்கின்றன.

**நடராசர்:**

இக்கோயிலிலுள்ள நடராச வடிவம், மிக்க அழகும், அற்புதமும், தத்துவ நுட்பமும் வாய்ந்தது. கலை-விஞ்ஞானம்-சமயம் என்னும் மூன்றும் சேர்ந்து கலந்த ஒரு பெரும் இணைப்பு விளக்கமே, நடராச வடிவம் எனலாம். நடராசரின் திருவாசி, பிரணவம் என்னும் ஓங்கார வடிவில் அமைந்துள்ளது. அது உலகமாகிய நடன மேடையைக் குறிக்கின்றது. இந்த நடன மேடையாகிய அரங்கில், நடராசர் ஐந்தொழில் இன்பத் திருக்கூத்து என்னும் பஞ்சகிருத்தியப் பரமானந்தத் தாண்டவம் புரிகின்றார். அவருடைய வலக்கையிலுள்ள உடுக்கை, படைப்புத் தொழிலை உணர்த்துகின்றது. இடக்கையிலுள்ள நெருப்பு சங்காரம் என்னும் ஒடுக்குதற் றொழிலைக் குறிக்கின்றது. அஞ்சேல் என்னும் அபய முத்திரை கொண்ட வலக்கை, காத்தற் றொழிலைக் காட்டுகின்றது. தாழ்ந்து தொங்கும் இடப்பக்கத்துக் கை, தூக்கிய திருவடி என்னும் குஞ்சிதபாதத்தைச் சுட்டிக் காட்டுகின்றது. ''ஆட எடுத்திட்ட பாதமன்றோ நம்மை ஆட்கொண்டதே'' என்ற தேவாரப் பாடலின் படி, இத் திருவடியே நம்மை ஆட்கொண்டு அருள்புரிந்து, பேரின்பம் வழங்குகின்றது. நடராசரின் திருவடிக்கீழ் உள்ள முயலகன் என்னும் அசுரனின் வடிவம், உயிர்களாகிய நம்மைப் பற்றியுள்ள ஆணவ மலத்தினை உணர்த்துகின்றது. நடராசப் பெருமானின் அழகிய திருமுகத்திற் பொலியும் புன்முறுவல் ''என்று வந்தாய்?'' என நம்மை வினவும் அருட்பெருந் திருக்குறிப்பைப் புலப்படுத்துகின்றது. நடராசப் பெருமானின்,

''குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்,
பனித்த சடையும், பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும்,
இனித்தம் உடைய எடுத்த பொற்பாதமும், காணப் பெற்றால்,
மனித்தப் பிறவியும் வேண்டுவதே, இந்த மா நிலத்தே''

என்று திருநாவுக்கரசர் பாடுகின்றார்.

நடராசப்பெருமான், நடனக்கலையின் அதிதெய்வம் ஆதலால், அவருக்கு உரிய இக் கோயிலின் கிழக்குக் கோபுரத்திலும், மேற்குக் கோபுரத்திலும், நடனக் கலையின் 108 கரண வேறுபாடுகளை உணர்த்தும் சிற்பங்களும், அக்கரணங்களுக்கு உரிய நாட்டிய சாத்திரச் சூத்திரங்களும், செவ்விய முறையிற் செதுக்கப் பெற்றிருக்கின்றன.

**திருவண்ணாமலை:**

16-ஆம் நூற்றாண்டில், விசயநகர அரசர்களால் கட்டப்பெற்ற பல கோபுரங்களைக் கொண்ட கோவில்களுக்கு, திருவண்ணாமலைக் கோயில் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு ஆகும். 'ஞானத் தபோதனரை வா என்று அழைக்கும் மலை' ஆகிய திருவண்ணாமலைக் கோயில், கார்த்திகைத் தீபவிழாவினால், மிகவும் புகழ் பெற்றது. சங்க காலத்திலேயே கார்த்திகைத் தீபவிழா புகழ்பெற்றிருந்தது என்று அகநானூறு முதலிய சங்கப் பாடல்களால் புலனாகின்றது. ''அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே'' என்று சம்பந்தரும், ''ஆடிப் பாடி அண்ணாமலை கைதொழ ஓடிப்போம் நமது உள்ள வினைகளே'' என்று திருநாவுக்கரசரும், திருவண்ணாமலைக் கோயிலைப் புகழ்ந்து பாடியுள்ளனர். இக்கோயிலில் நான்கு திசைகளிலும் நான்கு கோபுரங்கள் அமைந்துள்ளன. கிழக்கே இராச கோபுரம், தெற்கே திருமஞ்சன கோபுரம், மேற்கே பேய்க் கோபுரம், வடக்கே அம்மணிஅம்மாள் கோபுரம் ஆகியவை உள்ளன. கிழக்கிலுள்ள இராச கோபுரத்தின் உயரம் 217 அடி. தமிழ்நாட்டில் உள்ள கோபுரங்களிலெல்லாம், இதுவே மிகவும் உயரமானது ஆகும். இக்கோயிலின் பரப்பு 25 ஏக்கர். இக்கோயிலில் பற்பல மண்டபங்கள் உள்ளன. பதினாறு கால் மண்டபம், ஆயிரக் கால் மண்டபம், வசந்த மண்டபம், மகாமண்டபம், திருக்கல்யாணமண்டபம் முதலியன குறிப்பிடத்தக்கவை.

**திருவரங்கம் கோயில்:**

கோயில்கள் முதன் முதலில் பொதுவாக ஒரு சிறிய கருவறையை மட்டுமே கொண்டவையாக இருந்தன. காலப்போக்கில், பல நூற்றாண்டுகளில், பல அரச பரம்பரையினரால் கோயில்களில் மண்டபங்களும், கோபுரங்களும் சிறுசிறு துணைச் சந்நிதிகளும் சேர்க்கப்பட்டன. மண்டபங்களும், கோயிலின் உள்ளாகவே உள்ள் திருக்குளங்களும், விசய நகர் அரசர்கள் காலத்தில் மிகுதியாயின. அம்முறையில், திருவரங்கத்தில் உள்ள கோயிலின் கருவறையானது ஏழு பிராகாரங்களாகிய உயர்ந்த மதில்களால் சூழப்பெற்று, ஒரு பெரிய நகரமாக வளர்ந்து, 21 கோபுரங்களைக் கொண்டு விளங்குகின்றது. வைணவர்களுக்குக் 'கோயில்' என்றால் அது திருவரங்கம் அரங்கநாதர் கோயிலையே குறிக்கும். ''தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம்'' என்று ஆழ்வார்கள் போற்றிய இக் கோயிலின் மூலவர், அரங்கநாதப் பெருமாள் ஆவர். ''அரவரசப் பெருஞ்சோதி அனந்தன் என்னும் அணி விளங்கும் உயர்வெள்ளை அணையை மேவித் திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையால் அடி வருட'', அரங்கநாதர், ''குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்புகாட்டி தென்திசை இலங்கை நோக்கிப்'' பள்ளி கொண்டுள்ளார். சிலப்பதிகார காலத்திலேயே திருவரங்கத்தில் பள்ளிகொண்டுள்ள அரங்கநாதரின் பெருமை, எங்கும் பரவிப் புகழ்பெற்றிருந்தது. இக்கோயிலில் விசயநகர அரசர் காலத்தில் பெரியபெரிய தூண்களும், அவற்றில் குதிரைமீது ஏறிய வீரர்களின் சிற்பங்களும், கம்பீரமான முறையில் அமைக்கப் பெற்றன. இங்குள்ள சேஷராயர் மண்டபம் சிற்பக் கலைத்திறனில் சிறந்து விளங்குகின்றது. பொதுவாக விசயநகர அரசர் காலத்தில் சிற்பக்கலையின் வளர்ச்சி, உச்சநிலை பெற்றுத் திகழ்ந்தது.

**மதுரை மீனாட்சியம்மை கோயில்:**

கி.பி. 1600 முதல் தொடங்கி, ஒரு நூறு ஆண்டு காலம் வரையில், மதுரை நாயக்க மன்னர்கள், கோயில்களில் பெரிய பெரிய உயரமான கோபுரங்களைக் கட்டினர். அக் கோபுரங்களை ஆயிரக்கணக்கான சுதை உருவங்களால் அழகுபடுத்தினர். ''காலத்தொடு கற்பனை கடந்த கருவூலத்துப் பழம்பாடற் கலைமாச் செல்வர் தேடி வைத்த கடவுள் மணியும்—தொடுக்கும் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனும்—நறை பழுத்த துறைத் தீந்தமிழின் ஒழுகும் நறுஞ்சுவையும் - புவனம் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியமும்'' ஆகிய மதுரை மீனாட்சியம்மனின் திருக்கோயில், இத்தகைய அற்புதச் சிற்ப வேலைப்பாடுகள் பலவற்றைக் கொண்டதாகும். சங்க காலத்தில் கோயில்களுக்கு 'நகர்' என்னும் ஒரு பெயர் உண்டு. அம்முறையில் மதுரை மீனாட்சியம்மன் கோயில், ஒருபெரும் நகரம் போலவே அமைந்து விளங்குகின்றது. இக்கோயிலின் நுழைவு வாயில்கள், மிகுந்த வேலைப்பாடுகள் கொண்டவை. இங்கு ஒன்பது கோபுரங்கள் உள்ளன. மேற்குக் கோபுரம் 160 மீட்டர் உயரம் கொண்டது. இதற்கு அருகில் பெரும் கருங்கல்லில் செய்யப்பெற்றுள்ள இசைத்தூண்கள் உள்ளன. மதுரைக் கோயிலில் உள்ள சிற்பங்களும் சுதை வேலைகளும், சுமார் மூன்றுகோடியே முப்பது லட்சம் (33 மில்லியன்) என்று மதிப்பிடப்பட்டுள்ளன. இங்குள்ள ஆயிரக்கால் மண்டபத்திலுள்ள தூண்களில் சிறந்த சிற்பங்கள் பலவற்றைக் காணலாம். இந்த ஆயிரக்கால் மண்டபம் தளவாய் அரியநாத முதலியார் என்பவரால் கட்டப் பெற்றது. இதோ யானைமுகங்கொண்ட அழகிய பெரிய விநாயகர். இங்கே காதல் தெய்வமாகிய இரதி தேவி அன்னத்தின்மீது இவர்ந்து செல்கின்றாள். அழகின் திருவுருவமான மோகினி இதோ காட்சி தருகின்றாள்.

**விசயநகர் காலக் கோயில்கள்:**

விசயநகர அரசர்களும், மதுரை நாயக்க மன்னர்களும், கட்டிடக் கலைக்கும், சிற்பக்

கலைக்கும் பெரும் அளவில் ஆதரவு அளித்தனர். காஞ்சிபுரம் வரதராசப்பெருமாள் கோயிலில், ஒரே ஒரு தனிக்கல்லில் தொங்கும் சங்கிலி ஒன்று செதுக்கப்பெற்றுள்ளது. தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள முருகன் சந்நிதியில், இழை போன்ற, மிக நுட்பமான, அரிய சிற்ப வேலைப்பாடுகள் கருங்கல்லில் செதுக்கப்பெற்றுள்ளன. கோயில் கட்டுவதற்கு மரத்தைப் பயன்படுத்தாமல் விடுத்த நெடுங்காலத்திற்குப் பின்னருங்கூட, மரத்தில் செய்யும் வேலைப்பாடுகளைக்கருங்கற்களில் சிற்பிகள் தொடர்ந்து செய்து வந்தனர். அக்காலத்தின் பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப, மக்களின் நடை உடை பாவனை அணிகலன் தலையலங்காரம் முதலிய வற்றை, மிக நுணுக்கமாகவும், விரிவாகவும் நமக்கு வியப்பு உண்டாகும் வகையில், விசய நகர ஆட்சிக் காலத்துச் சிற்பங்கள் பிரதி பலித்துக் காட்டுகின்றன.

17-ஆம் நூற்றாண்டில் கருவறையைச் சுற்றியுள்ள இடைவெளி, கூரை வேயப்பெற்ற ஒரு பெரிய பிராகாரமாகியது. இதனைச் சுசீந்திரம், இராமேசுவரம் ஆகிய கோயில்களில் காணலாம். இராமேசுவரத்திலுள்ள மூன்றாம் பிராகாரம் 1200 மீட்டர் நீளமுடையதாய் , உயர்ந்த சுவர்களும், மிகப் பெரிய தூண்களும் கொண்டு விளங்குகின்றது.

**தற்காலம் :**

கருங்கல்லில் அமைந்த இக் கட்டிடக்கலை, சிற்பக்கலை ஆகியவற்றின் சிறப்பு, பண்டைக் காலத்திற்கு மட்டுமே உரியதன்று. அஃது இன்றும் உயிர்ப்பாற்றலுடன் வளர்ந்து கொண்டு வருகின்ற ஒரு சிறந்த பாரம்பரியக் கலைச் செல்வமாகும். தமிழ்நாடு அரசு, மாமல்லபுரத்தில் ஒரு சிற்பக்கலைக் கல்லூரியை நடத்தி வருகின்றது. அங்கு மாணவர்கள் சிற்பக்கலையிலும், கட்டிடக்கலையிலும், பயிற்சியும் தேர்ச்சியும் பெற்று வருகின்றனர். காலத்தொடு கற்பனை கடந்த பண்டைக்காலத்துப் பாரம்பரியத்தின் சுடரொளியைப் பரப்பும் முறையில், புதிய கோயில்கள் பல கட்டப் பெற்றுக் கொண்டு வருகின்றன. தற்போதுள்ள கோயில்கள் சில, தம்முடைய முன்னைச் சிறப்பினையும் ஒளியினையும் பாதுகாத்துக் கொள்ளும் முறையில், புதுப்பிக்கப்பெறுகின்றன. கோபுரத்தில் உச்சியில் உள்ள புனிதக் கலசங்கள் நமக்குத் தொலைவிலிருந்து தோன்றுவது போலச் சிறியன அல்ல. உண்மையில் அவைகள் ஓர் ஆள் உயரத்திற்குமேலும் மிகப் பெரியன வாகும்.

**முடிவுரை :**

கோயில் என்பது, சமய உணர்விஞல் மக்கள் கூடுகின்ற ஒரு வெற்றிடம் அன்று. அஃது ஒரு மிகப்பெரிய நிறுவனம். மனிதன் தன்னை முழுதாக இறைவனிடம்ஒப்படைத்துக்கொண்டு அடைக்கலம் புகுந்து, இறைவனாகிய ஒரு பெரும் தெய்விக சக்தியைக் கலை வடிவமாகப் படைப்பதன் பெரு விளக்கமே, கோயில்கள் எனலாம். காலங் கடந்து நிற்கும் ஓர் உயரிய வாழ்க்கையின் உன்னத அடையாளமாகக் கோயில்கள், நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகின்றன. இனியும் அவ்வாறே எப்போதும் தொடர்ந்து இருந்து வரும் என்பது திண்ணம்.

'ஊரிலான் பேரிலான் உருவிலான் குணமிலான்' எனப்படும் இறைவன், விறகில் நெருப்பும், பாலில் நெய்யும், பழத்தில் சுவையும், எள்ளின்கண் எண்ணெயும் போல், மறைய நின்று, எங்கும் பரவி விரவி, மன்னுயிர்க்கெல்லாம் அருள் செய்தற்பொருட்டு, ஒருவகையில் ஊரும் பேரும் உருவும் பிறவும் கொண்டு, எழுந்தருளி விளங்கும் அருட்பெரு நிலையங்களே திருக்கோயில்கள் ஆகும்.

பசுவின் உடம்பு முழுவதிலும் பாலானது பரவி இருப்பினும், பசுவின் மடியிலிருந்து மட்டுமே, நாம் பாலைப் பெற முடிவதுபோல, இறைவன் அங்கு இங்கு எனாதபடி உலகம் எங்கணும் நீக்கமறப் பரவி நிறைந்து நிற்பினும், அவனது அருளைத் திருக்கோயில்களின் வாயிலாகவே, நாம் பெறுதல் இயலும்.

காணவும் கருதவும் இயலாமல், எல்லாவற்றையும் கடந்து நிற்கும் கடவுளாகிய பரம் பொருளை, எளிய சாதாரண பாமர மக்களும், ஒருவாறு நினைந்து உணர்ந்து வழிபட்டு நலங்கள்பெறும்படி செய்து உதவிபுரிந்து வரும் நிறுவனங்களே திருக்கோயில்கள். நமது தமிழகக்கலை நாகரிகப் பண்பாட்டு நலங்களை யெல்லாம், தமக்குரிய அடிப்படை நிலைக்களனாகக் கொண்டு விளங்கிவரும் நம் திருக்கோயில்களை, நாம் நன்கினிது போற்றி வளர்த்துப் பாதுகாத்து, நாம் வையத்து வாழ்வாங்கு வாழ முயல்வோமாக!

—தமிழாக்கம்: ஆசிரியர்

# திருவாசகத்தின் இலக்கியத்திறன்*

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

## (முற்றொடர்ச்சி)

8. மேகம் மழை பொழிகின்ற கார்காலத்தில், தோன்றியும் காந்தளும் ஆகிய பூக்கள் மலரும். இந்திர கோபப் பூச்சிகள் எங்கணும் தோன்றிப் பறந்து விரைந்தழியும். மாணிக்கவாசகர்க்கு இறைவன் குருவடிவில் எழுந்தருளி 'அஞ்சேல்' என்று காட்டியருளிய திருக்கையாகத் **தோன்றி** மலரும், இறைவனைக் காணப்பெற்று வணங்கிய அடியார்களின் கூப்பிய கைகளாகக் **காந்தள்** மலரும், இறைவனின் அருளை எய்தப் பெற்றதனால் அடியவர்களின் பிறப்பிறப்புக் கவலைகள் அழிந்தொழிதலாக இந்திரகோபப்பூச்சிகள் (ஈயல்) பரவி அழிதலும், பொருத்தமுற உருவகம் செய்யப்பெற்றுள்ளன.

9. கார்காலத்தில் மழை பொழிவதற்கு முன்னர், வேனிற் காலத்து வெயிலில், காடுகளிலுள்ள மான்கூட்டங்கள் நீர்விடாய் கொண்டு, பேய்த்தேர் ( Mirage ) ஆகிய கானலினை, நீர் என்று மயங்கித் தேடி ஓடி அலைந்து திரிந்துவருந்தும். அறுவகைச் சமயத்தவர்களை மான் கூட்டமாகவும்; அவர்தம் பொருந்தாக் கொள்கைகளை நீர்விடாய் தணித்தற்குதவாத பேய்த்தேர் என்னும் கானல் நீராகவும்; இங்கு மாணிக்கவாசகர் உருவகம் செய்துள்ளார்.

10. மழை பொழிதலினால் ஆற்றில் நீர் பெருகுதலை அருள்வெள்ளம் என்றும், அதன் கண் சுழிகள் கொழித்தலை இன்பமேலீடு என்றும், இருகரைகளும் சரிதலை உலகியற் பந்த பாசங்களின் ஒழிவு என்றும், இரு கரைகளிலுமுள்ள மரங்கள் வெள்ளப் பெருக்கால் வேர் அற்றுச் சாய்ந்து சிதைதலைப் புண்ணிய பாவங்களாகிய இரு வினைகளும் நீங்குதல் என்றும், வெள்ளநீர் பாயப்பெறும் வயல்களை அருச்சனையாகிய வழிபாடு என்றும், விதையினை அன்பு என்றும், அடியார்கள் ஆகிய தொண்டர்களை உழவர்கள் என்றும், பிறவாறும் ஏற்ற பெற்றி பொருத்தமுற உருவகித்திருக்கும் மாணிக்கவாசகரின் புலமை மாட்சிமை, பெரிதும் புகழ்ந்து போற்றற்பாலதொன்றாகும்.

**திருவண்டப்பகுதியின் சிறப்பு:**

கவிஞனின் தூய சிறந்த உணர்ச்சியானது உந்தப்பெற்று, மேலெழுந்து பொங்கி ஆற்றலுடன் வெளிப்படும்போது, அழகிய இனிய அரிய சொற்களும், சொற்றொடர்களும், அக் கவிஞன் ஒருசிறிதும் முயற்சி செய்ய வேண்டாமல், தாமே தம்முள் இகலிக்கொண்டு முன்வந்து நின்று, ஏவல் கேட்டுப் பணிபுரியும் நிலையில், அவன் பாடும் கவிதைகளில் மிகவும் சிறப்புற அமைந்து திகழும் என்று, அறிஞர்கள் கூறுவர். அவ்வுண்மைக்கு ஏற்பவே, இத் திருவண்டப்பகுதி அகவற்பாவின் சொற்களும், சொற்றொடர்களும் சுவை நிரம்பி, எளிதினிது பொற்புற அமைந்திருக்கின்றன. இனிய சிறந்த இவ்வியல்பு, நினைத்தொறும் நினைத்தொறும் இன்பம் விளைவிக்கின்றது. இச்சிறப்பெல்லாம் நன்கு கருதியே, மேலைநாட்டுப் பேரறிஞர் ஆகிய திரு. ஜி. யு. போப் அவர்கள், இத் திருவண்டப் பகுதியின் வரிகளை மிகச் சிறப்பாக விதந்தெடுத்து வியந்து போற்றியுள்ளார். (9)

## "ஒன்றும் நீ அல்லை ; அன்றி ஒன்று இல்லை"

இனி, வேறொரு சிறந்த பாடலின் சொற்பொருள் நலங்களையும், ஈண்டு ஒருசிறிது சுவைத்து இன்புற்று அமைதல் சாலும். திருவாசகத்தில், அனைத்துமே சிறந்த அரிய இனிய பாடல்களாகும். ஆயினும் அவற்றுள்,

''இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன் ;
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந்
தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே ;
ஒன்றும்நீ யல்லை ; அன்றியொன் றில்லை ;
யாருன்னை அறியகிற் பாரே ?''

---

9. "Lines 66-95 are well-nigh untranslatable, for they contain a subtle and intricate allegory, by means of which the grace of the manifested Sivan, who is praised under the title of the 'Cloud' is set forth. In these profound and pithy lines, every particular of the description has its mystical meaning''.

—*Rev. Dr. G. U. Pope*

எனவரும் அழகிய இனிய பாடல், திருவாசகப் பாடல்களிலேயே மிக மிக முதன்மையான, விழுமிய முழுமணி போன்ற பெருநலம் சான்ற தாகும். இதனைத் திருவாசகத்தின் 'இருதய சுலோகம்' என்றும் கூறலாம். தொட்டனைத் தூறும் மணற்கேணி போலக் கற்றனைத்தூறும் பற்பல சிறந்த நுண் பொருள்களைத் தன்ன கத்தே பொதிந்து கொண்டு, பொலிந்து விளங் குகின்றது, இவ்வரிய சிறந்த திருப்பாடல்!

**பாடலின் கருத்து :**

திருவாசகத்தில் ''கோயிற்றிருப்பதிகம்'' என்னும் பகுதியில், ''அநுபோக இலக்கணம்'' கூறும் பாடல்களுள் ஒன்றாக, இப்பாடல் அமைந்துள்ளது. இதன்கண் மாணிக்கவாசகப் பெருமான், இறைவன் தமக்கு அருள் செய்த தனையும்; தம்மைப் பற்றியுள்ள மலத்தைப் போக்கித் தம் அறியாமையை நீக்கியதனையும், தம்முடைய உள்ளத்தில் ஞான ஒளியைப் பரப் பும் சூரியனாகத் தோன்றி நிலைபெற்ற இயல் பினையும்; அத்தகைய இறைவனின் அருட் பெரும் இயல்புகளைத் தாம் நினைப்பற நினைந்து போற்றி வருதலையும், குறிப்பிட் டருளுகின்றார்.

இறைவன் அணுவினும் மிகமிக நுண்ணிய னாய் எல்லாப் பொருள்களிலும் கலந்து நின்று இயக்கிவரும் அத்துவித இயல்பும்; உலகிலுள்ள உயிர்ப்பொருள்கள் உயிரில்பொருள்கள் (சித்து, சடம்) என்பவை, இறைவன் இயக்கினால் அன்றி இயங்கமாட்டாமையும்; அங்ஙனமே யாவற்றையும் இயக்கும் இறைவன் அவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டு அதீதநிலையில் விளங் கும் தன்மையும்; அத்தகைய இறைவனை உயிர் கள் தம்முடைய முயற்சியினால் சுட்டறிவு கொண்டு அறிதல் இயலாது என்னும் உண்மை யும்; இப்பாடலின்கண் நன்கினிது விளக்கப் பட்டு இருக்கின்றன. இப்பாடலின் ஒவ்வொரு சொல்லும் மிக மிக ஆழ்ந்து ஆராய்ந்து நுனித்து உணர்தற்கு உரியதாக அமைந்துள் ளது.

**பாடலின் பொருள் :**

''இந்நாளில் எனக்கு அருள்புரிந்து, என்னுடைய அறியாமையாகிய இருளைப் போக்கி, மனத்தின் உள்ளே வெளிப்படு கின்ற சூரியனைப்போல் வெளிப்பட்டு, நிலைபெற்ற, நின்னுடைய சிறந்த இயல் புகளை, இடைவிடாமல் எப்பொழுதும் நினைந்து துதிக்கும் பேற்றை, யான் பெற் றேன்.

உன்னை யல்லாமல், வேறொரு பொருளும் இல்லாதபடி, எல்லாப் பொருள்களிலும் கலந்து கலந்து, அணுத் தன்மைப்பட்டு நுணுகி நுணுகி, எங்கும் ஒரு தன்மையாய் விரவி நிற்கும் ஒப்பற்ற பொருளாகத் திருப்பெருந்துறையின்கண் உறைகின்ற சிவபெருமானே!

காணப்படும் பொருள்களுள், நீ ஒரு பொருளும் ஆகமாட்டாய். ஆயினும் உன்னையல்லாமல் ஒரு பொருளும் இயங்கு வதில்லை. இத்தகைய நின்னை அறியும் வல்லமை உடையவர்கள், உலகில் யாவர் உளர்? ஒருவரும் இலர்''

என்பது, திருவாசகத்தில் வரும் எத்துணையோ பல சிறந்த பாடல்களுள், ஒரு பெரும் விழுமிய முழுமணி போன்று ஒளிவிட்டு விளங்கும் இவ் வரிய இனிய பாடலின் திரண்ட பொருள் ஆகும். இதன்கண் ஒவ்வொரு சொல்லும், சொற்றொடரும் மிக நுணுகிய ஆழ்ந்த பொருள்நலம் உடையது. அவற்றை இங்கு ஆராய்ந்து காண்போம்.

**சொற்பொருள் நலங்கள் :**

1. 'இன்று' என்றது, சிவபிரான் திருப் பெருந்துறையில் குருந்த மர நிழலில் ஆட் கொண்டருளிய புனித நாளை உணர்த்துகின் றது எனக் கொள்ளலாம். மாணிக்கவாசகப் பெருமான், (அ) ''மெய்யே உன் பொன்னடி னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்'' (ஆ) ''பெருந்துறையின் மேய பெருமான் பிரி யாது இருந்து உறையும் என் நெஞ்சத்து இன்று'' (இ) ''இன்று எனக்கு ஆரமுது ஆனாய் போற்றி'' (ஈ) ''களித்தனன் உன்னைக் கண் ணுறக் கண்டு கொண்டு இன்றே'' என, இன்று என்னும் சொல்லைப் பல இடங்களில் வழங்கியருளியிருத்தல் காணலாம்.

2. 'எனக்கு அருளி' என்னும் தொடரில், 'எனக்கும்' என்ற இழிவு சிறப்பு உம்மை மறைந்து நின்றது. 'எனக்கு' என்னும் சொல், தம்முடைய சிறுமைகளை எல்லாம் தொகுத் துச் சுருக்கி உணர்த்தும் வகையில் அருளிச் செய்யப்பட்ட தாகலின், அஃது 'இசை எச்சம்' எனக் கொள்ளப்பெறும்.

3. 'இருள்கடிந்து' என்றது, இறைவன் தமக்கு ஞானோபதேசம் செய்து, தமது அறி யாமையைப் போக்கியருளிய பேருதவியை வியந்தவாறு. 'குற்றங்கடிதல்' என்றாற்போல 'இருள்கடிதல்' என்று குறிப்பிட்ட திறம் உணர்ந்து இன்புறற்பாலது.

4. அருளைப் போக்குதலும், ஒளியைப் பரப்புதலும், ஞாயிற்றின் செயல். அம்முறை யில் தமது அறியாமை இருளைப் போக்கித் தமக்கு ஞான ஒளியைக் கொடுத்தருளியமை பற்றி, அடிகளார் இறைவனை ஞாயிறு என வியந்து போற்றினார். நக்கீரர் பெருமானும், முருகனை ஞாயிறு என விளக்கியிருத்தல் இங்குக் கருதற்பாலது. மாலையில் மறையும் சூரியனை விலக்கி, ஒளிமிகுந்த அழகிய காலைக் கதிர வனை உணர்த்துவதற்காக 'எழுகின்ற ஞாயிறு' என்றார். 'ஞாயிறே போன்று' என்பதில் ஏகாரம் பிரிநிலை; சந்திரன் விண்மீன்கள் ஆகிய பிற ஒளிப் பொருள்களை விலக்கியது.

5. சூரியன் கிழக்குக் கடலில் அல்லது உதயமலையில் தோன்றுவதாகக் கூறுவது கவி

மரபு. அந்தப் பௌதிக சூரியனை விலக்கி ஞான சூரியனாகிய இறைவனையே சுட்டி உணர்த்த 'உள்ளத்து எழுகின்ற ஞாயிறு' என்று விதந்து கூறினார். இனி, 'உள்ளத்து' என்பதை 'எழுகின்ற' என்னும் சொல்லோடு சேர்த்துக் கொள்ளாமல், 'உள்ளத்து நின்ற நின்தன்மை' எனவும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளலாம். இறைவன் உலக மெங்கும் வியாபித்திருந்தாலும், அன்பர்களா கிய ஞானிகளின் உள்ளத்திலேயே நிலைபெற் றுத் தங்கி வீற்றிருக்கின்றான் என்பது, வேதாகமங்களின் முடிபு. அஃது இங்கே குறிப் பிடப்பட்டதாகக் கொள்ளலாம். ''பெருந் துறையின் மேய பெருமான் பிரியாது இருந்து உறையும் என் நெஞ்சத்து இன்று'' எனவும்: ''இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க'' எனவும்: ''என்னுடைய சிந் தையே ஊராகக் கொண்டான் உவந்து'' என வும் மணிவாசகர் கூறுதல் காண்க.

6. 'நின்ற' என்னும் சொல் காலவழு வமைதி. 'நிற்கின்ற' என்னும் பொருளில் வந் தது. ''முக்காலத்தினும்ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழும் காலத்தானே'' என்பது நன்னூற் சூத்திரம். 'மலர்மிசை ஏகினான்' எனத் திருவள்ளுவர் இறந்த காலத்திற் குறிப் பிட்டதும், ஆசிரியர் பரிமேலழகர் அதனைக் காலவழுவமைதி என்று விளக்கியிருப்பதும், இங்கே சிந்தித்து இன்புறுதற்குரியன.

7. 'நின் தன்மை' என்பது, இறைவனின் உயர்வற உயர்ந்த பெரு நலங்களையும், அத்தகைய இறைவன் தம்பொருட்டு எளிவந்து இரங்கிப் புரிந்தருளிய எல்லையற்ற பேரருள் உதவிகளையும், தொகுத்து உணர்த்தும்.

8. 'நினைப்பற நினைந்தேன்' என்னும் தொடர், இப்பாடலில் மாணிக்கவாசகரால் முதன் முதலில் புதிதாகப் படைத்து வழங்கப் பெற்ற அருமைமிக்க-ஓர் அழகிய - இனிய- பொருள் பொதிந்த சொற்றொடர் எனலாம்! 'நினைப்பு' என்பது மறப்பின் பின் நிகழ்வது. மறந்ததை நினைப்பதும், நினைந்ததை மறப் பதும் நம்மனோர்க்கு இயல்பு. மாறி மாறி அடுத்தடுத்து நிகழும் நினைப்பு மறப்புக்கள் இல்லாதபடி, எப்பொழுதும் இடைவிடாமல் நினைத்து இறைவனைத் தியானித்துக்கொண்டு, அவனோடு ஒன்றியிருக்கும் திருவருட் பேற் றினை எய்தப் பெற்றமையினால், மணிவாசகர் 'நினைப்பற நினைந்தேன்' என்று அருளிச் செய்தார். இதனைச் 'சாக்கிர அதீத நிலை' எனச்சைவசித்தாந்த நூல்கள் கூறும். 'நினைப் பற நினைந்தேன்' என்னும் இவ்வரிய தொட ரின் அருமைப்பாட்டை மிகவும் வியந்து, கவி ஞர்கள் பலர் இதனைத் தத்தம் கவிதைகளில் தழுவிப் போற்றிக் கொண்டுள்ளனர்.

9. 'நீ அலால் பிறிது மற்று இன்மை' என்னும் தொடர், இறைவன் இவ்வுலகப் பொருள்கள் எல்லாமாகவும் விளங்கும் தன் மையை உணர்த்துகின்றது. 'எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி' என்பது, திருநாவுக் கரசர் தேவாரம். ஞானிகள் இவ்வுலகப் பொருள்களை எல்லாம் சிவமயமாகவே காண் பர். எவ்விடத்திலும் எல்லாப் பொருள்களிலும் சிவத்தைக் காண்பதும், எல்லாவற்றையும் சிவ மயமாகவும் சிவச்செயலாகவும் கொள்வதும், ஞானிகளின் இயல்பு. இந்நிலையினை எய்தும் தன்மையே ஞானப் பேற்றிற்கும் நற்பெரும் அறிகுறியாகும்.

''பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர்
பரமே பார்த்திருப்பர் ;
பதார்த் தங்கள் பாரார்......'' (1)

''சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்'' (2)

எனவரும் சிவஞானசித்தியார் செய்யுளுக்கு ஏற்ப, மாணிக்கவாசகர், எல்லாம் சிவமயமாகக் காணும் நல்லாராக விளங்கப் பெற்றதனை, 'நீ அலால் பிறிது மற்று இன்மை' என்னும் தொடர், தெளிவுறப் புலப்படுத்துகின்றது.

10. 'சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து' என்னும் தொடர், இப் பாடலில் மிகமிக முதன்மை வாய்ந்த ஒரு சிறந்த தொடராகும். இத் தொடரின்கண் வரும் 'அணு' என்னும் சொல் ஆன்மாவைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். ஆணவ மலத் தின் சேர்க்கையால், உயிர் தன்னுடைய வியா பகத்தன்மை குன்றி அணுவைப் போன்று குறுகிய தன்மையை அடைதலின் ,உயிர்களுக்கு 'அணு' என்றும் ஒரு பெயர் வழங்கும்.

(அ) 'சென்று சென்று, தேய்ந்து தேய்ந்து' எனவரும் தொடர்களுக்குப் பல வகையில் பொருள்கள் கொள்ள வாய்ப்புண்டு.* அவைகளுள்ளே, இவை இறைவன் மிகமிக நுண்ணியனாதலை உணர்த்துகின்றன என்பது ஒரு கருத்து.

(ஆ) ஆன்மாக்கள் படிப்படியாக வெவ் வேறு பிறவிகளையும் நிலைகளையும் அடைந்து, முடிவில் இறைவனை அடைகின்றன என்ப தனை உணர்த்துகின்றன என்பது, பிறிதொரு கருத்து.

(இ) 'சென்று சென்று' என்பது உயிர் களின் உலகப் பற்று நிலையையும், 'தேய்ந்து தேய்ந்து' என்பது உயிர்களின் இறையருட் பற்று நிலையையும் குறிப்பதாகவும், இவற் றைக் கொள்ளுதல் கூடும்.

(ஈ) இனி, உயிர்களின் மலப்பிணிப்பு நிலையில், இறைவன் உயிர்களின் பின்னே சென்று சென்று, 'புறம் புறம் திரிந்த செல் வமே' என்றாற்போல ஆட்கொள்ளுகின்றான்; அருள்பெற்ற நிலையில் உயிர்கள் இறைவனின் பின்னே செல்லத் தலைப்பட்டுத் தம்முடைய குற்றங்கள் எல்லாம் தேய்ந்து தேய்ந்து ஒழிய, உய்தியும் உயர்வும் பெறுகின்றன. இந்த உண் மையையும், இத்தொடர்கள் உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

---

* "Words do not have *either -or meanings* in imaginative poetry; they have *and-and-and meanings.* That is how poetry works".

—*Hilary Corke*

(உ) தூலதேகம், சூக்குமதேகம், காரண தேகம் என்பனவற்றிலெல்லாம் சென்று சென்று, அணுத்தன்மை இத்தகையதென்று அறிந்து அழுந்தி, சீவபோதமும் கன்மநுகர்ச்சியும் ஆகியன தேய்ந்து தேய்ந்து குறைந்தொழிய, உயிரானது சிவபரம் பொருளோடு ஒன்று சேரும். நிலையை, இத்தொடர்கள் குறிப்பிடுகின்றன எனவும், நாம் கொள்ளுதல் அமையும்.

(ஊ) கானல் நீர் கண்டு மயங்கி, இங்கும் அங்கும் எங்கும் ஓடி அலையும் மான்கணம் போல, உயிர்கள் இன்பம் என்று எவ்வெவ் வற்றையோ பிறழ உணர்ந்து பெருமயக்குற்று அலைந்து திரியும் இயல்பினைச்'சென்றுசென்று' என்றும்: பின்னர் அவைகளே தாம் இன்பமெனக்கருதிய பொருள்கள் துன்பமாதலை அனுபவித்து உணர்ந்து தாம் அவற்றின்பாற் கொண்ட அவாவும் பற்றும் முறைமுறையே கழியப் பெறுதலைத் 'தேய்ந்து தேய்ந்து' என்றும் குறிப்பிட்டதாகக் கொள்ளுதலும் பொருந்தும். சென்று சென்று திரிதல் 'ஆரா இயற்கை அவா'; தேய்ந்து தேய்ந்து கழிதல் 'அவா நீத்தல்'; அந்நிலையே பேரா இயற்கை பெறுதல் 'ஒன்றாதல்' எனக் கொள்ளுதல் பொருந்தும்.

11. 'ஒன்றாம்' என்னும் சொல், 'சிவனே' என்னும் விளிச் சொல்லுடன் இயையும். இங்கு ஒன்றாதல், ஒப்பற்ற பொருளாதலையும், இரண்டறக் கலந்து அத்துவிதமாதலையும் உணர்த்தும். 'ஒன்றலா ஒன்றால் உளதாகி' எனவரும் சிவஞானபோதத்தால், ஒன்று என்பது, கடவுளுக்கே உரிய சிறப்புப் பெயராதல் அறியலாம்.

12. 'திருப்பெருந்துறை' என்பது இங்கு அப்பெயர் கொண்ட தலத்தை மட்டும் குறியாமல், 'வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க' என்றபடி, சைவ சமயம் அல்லது சைவசித்தாந்தம் ஆகிய அருள்நெறிப் பெருந்துறையினைக் குறிப்பதாகக் கொள்வதும் உண்டு. இப்பாடலைக் கொண்ட இத்திருப்பதிகம், திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப் பெறாமல், தில்லையிலேயே அருளிச் செய்யப் பெற்றதாகத் தெளிந்து, 'கோயிற்றிருப்பதிகம்' எனப் பெரியோர்களால் வழங்கப்பட்டு வருவதும், இங்கு நாம் நினைவு கூரத்தக்கது.

13. 'ஒன்றும்நீ அல்லை' என்னும் தொடர், இறைவன் உயிர்ப்பொருள் உயிரில்பொருள்களில் எல்லாம் கலந்து நிற்பினும், அவற்றினுள் ஒன்றாகாமல், அவற்றை யெல்லாம் கடந்து அதீதநிலையனாய் அப்பாற்பட்டு நிற்பன் என்பதனை உணர்த்திற்று.

14. 'நீ அன்றி ஒன்று(ம்) இல்லை' என்னும் தொடர், உடலுக்கு உயிர்போல நின்று இறைவன் இயக்கினால் ஒழிய, உயிர்ப்பொருள் உயிரில்பொருள் ஆகிய எவையும், தாமே இயங்கும் ஆற்றல் உடையன அல்லாமையைப் புலப்படுத்திற்று.

15. இங்கு 'அல்லை' 'இல்லை' என்ற சொற்களின் குறிப்பு, மிக நுட்பமானதாகத் திகழ்கின்றது. 'அல்லைஈது அல்லைஈது' என மறைகளும் இறைவனை அன்மைச் சொல்லி னாலேயே துதிக்கும். 'இன்மை' என்னும் சொல் இல்லாமையை உணர்த்தாமல், முனைத்து நில்லாமை அல்லது விளங்கித் தோன்றாமையை உணர்த்துவதாகக் கொள்ளுதல் வேண்டும். 'யாவையும் சூனியம் சத்தெதிர்' என்னும் சிவஞான போதவுரை காண்க.

16. 'ஆர்உன்னை அறியகிற்பார்?' என்றது, உயிர்கள் தம்முடைய சுட்டறிவினால் இறைவனை அறிதல் இயலாது என்பதும், யானையின் துணைகொண்டே யானையின் மீது ஏற வேண்டுவது போல, இறைவனை அறிதற்கு அவனுடைய அருளையே துணையாகப் பற்றல் வேண்டும் என்பதும் உணர்த்திற்று. 'தன்னறிவு அதனாற் காணும் தகைமையன் அல்லன் ஈசன்' என்பது சிவப்பிரகாசம்.

**சான்றோர் போற்றுரை :**

இங்ஙனம் எண்ணி எண்ணி உணருந் தோறும் நுண்ணிய பல பொருள்களை உணர்த்தி நிற்பதனால், இவ்வரிய இனிய இணையற்ற பாடலின் சிறப்பைச் சான்றோர்கள் பலரும் உவந்து போற்றியுள்ளனர். சைவ சித்தாந்தப் பெருஞ் சான்றோராகிய உமாபதி சிவம்,

''சென்றுசென் றணுவாய்த்
    தேய்ந்துதேய்ந் தொன்றாம்
என்றிறை யியற்கை
    யியம்புதல் தகுமே ''

எனத் தாம் இயற்றிய சங்கற்ப நிராகரணம் என்னும் தத்துவப் பெருநூலில் இத்திருவாசகச் செய்யுளை மேற்கோளாக, இற்றைக்கு 600 ஆண்டுகளுக்கு முன்னரே எடுத்துக் காட்டிப் போற்றியிருத்தல் காணலாம். அவ்வாறே வேதாந்த சித்தாந்த சமரச ஞானப்பெருஞ் செல்வராகிய தாயுமானசுவாமிகள் அவர்களும்,

நினைப்பறவே தான் நினைந்தேன்
    என்றநிலை நாடி
அனைத்துமாம் அப்பொருளில்
    ஆகும் நாள் எந்நாளோ? (1)

சென்றுசென் றணுவாய்த்
    தேய்ந்துதேய்ந் தொன்றாகி
நின்று விடும் என்றநெறி
    நிற்கும்நாள் எந்நாளோ ? (2)

என்று இத் திருவாசகப் பாடலைக் குறித்துத் தம்முடைய திருப்பாடல்களில் விதந்து வியந்து புகழ்ந்து போற்றியிருத்தலும், இங்கு நாம் உணர்ந்து மகிழ்தற்குரியது.

—(தொடரும்)

# தக்கோலம்

# திருவூறல் மகாதேவர் திருக்கோயில்

திரு. இராச. பன்னீர்செல்வம், B.Sc., தக்கோலம்.

**தக்கோலம்:**

செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த தக்கோலம், காஞ்சிபுரத்திலிருந்து 9.6 தொலைவில் உள்ளது. பண்டைச் சோழர் வரலாற்றில் தக்கோலம் தனிச் சிறப்பிடம் பெற்றுள்ளது. சுமார் 2000 ஆண்டுகளாகவே தக்கோலம் வரலாற்றுச் சிறப்புடையதாக விளங்கி வருகிறது. வடஅமெரிக்காவில் குடியேறிய ஆங்கிலேயர் அங்குப் புதிய இங்கிலாந்து என்று பெயரிட்டு (மலேயா) வாழ்ந்தது போலவே, மலேயா தீபகற்பத்தில் குடியேறிய இந்தியர்கள், அங்குப் 'புதிய தக்கோலம்' என்ற பெயரில் புதிய ஊரை அமைத்தனர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த டாலமி என்ற கிரேக்க நில நூலாசிரியர், இவ்வூரைத் 'தக்கோலம்' என்று வழங்கியுள்ளனர். கி.பி. 6ஆம் நூற்றாண்டைச்சார்ந்த மிலிந்த பன்ஹாவினும், தக்கோலம் இடம் பெற்றுள்ளது. புதிய தக்கோலம், சயாம் நாட்டைச் சார்ந்த தாகோபா (Takoba) மாவட்டத்திலுள்ளது. அது நாரணன் (கோப்ராநரை) என்ற பெயருடைய குன்றிற்கு எதிரே தக்கோலம் என்ற ஆற்றின் இடக்கரையில் அமைந்துள்ளது.

அங்கு தமிழ்க் கல்வெட்டுடைய பாறை ஒன்றில், மூன்று சிற்பங்கள் கிடைத்துள்ளன. குன்றின் பெயர் நாரணன் என்று வழங்கப்படுவது. சிற்பங்கள் விஷ்ணு ஸ்ரீதேவி இவர்களைக் குறிப்பது. தமிழ்க்கல்வெட்டு, ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருப்பது. அது அவனி நாரணன் என்ற விருதுப் பெயருடைய மூன்றாம் நந்திவர்மன் பெயரால், தஞ்சை மாவட்டத்து வைணவத் திருப்பதியான நாங்கூரைச் சார்ந்த தலைவன் ஒருவன் குளம் ஒன்றை வெட்டுவித்து அதனை மணிக்கிராமத்தார் என்ற வணிகக் கூட்டத்தினர், இராணுவப்பாடியில் தங்கியிருக்கும் சேனாமுகத்தார் ஆகியவர் பராமரிப்பில் விடுத்த செய்தியைக் குறிப்பிடுவது என்பனவற்றைக் கொண்டு, மலேயா தீபகற்பத்தில் கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் வைணவ சமயத்தைச் சார்ந்தவரும் திருமாலுக்குக் கோயில் கட்டி வழிபட்டவருமான ஒரு கூட்டத்துத் தமிழ் மக்கள் குடியேறி வாழ்ந்தனர் எனவும், அம்மக்களுள் ஒரு சாதாரண மணிக்கிராமத்தார் என்ற வணிகக் குழுவினர் வேற்று நாடுகளில் வாணிப நிலையங்களை நிறுவினர் எனவும், அவர்கள் தமக்கும் தம் வணிகத் துறைக்கும் காவலாக வீரர் குழுவைப் பெற்றிருந்தனர் எனவும், அக்காலத்தில் இந்திய வணிகக் குழுவினர்களுக்கு வேற்று நாட்டில் அத்தகைய மேதக்க தனிச்சலுகை வழங்கப்பட்டது எனவும் உணர்கிறோம்.

**தக்கோலப்போர்:**

கங்கையும் கடாரமும் கொண்ட சோழனான முதல் இராசேந்திரனுடைய 18ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 1030) அவனுடைய மெய்க்கீர்த்தியில் கல்வியில் வல்ல சான்றோரால் புகழப்படுவது மேம்பட்ட தக்கோலம் என்ற ஊராகும் என்ற கருத்தில் 'கலைத்தக்கோர் புகழ் தலைத்தக்கோலம்' என்ற அடி காணப்படுகிறது. தமிழகத்துத் தக்கோலத்தில் கி.பி. 9ம் நூற்றாண்டைச் சார்ந்த பழங்கோயில் ஒன்றுள்ளது. அதன்கண் முதல் ஆதித்தனுடைய தொண்டைநாட்டு வெற்றிக்குப் பிற்பட்டனவாக 21,24ம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அரை நூற்றாண்டுக்குப் பின் இத்தக்கோலத்திலேயே கன்னரதேவன் என்ற இராட்டிரகூட மன்னனான மூன்றாம் கிருஷ்ணன், முதல் பராந்தகனுடைய முதல் மகனான மும்முடிச்சோழ இராசாதித்தனைப் போர்க்களத்தில் கொன்று, (கி.பி. 949) சோழநாட்டின் வடபகுதியைக் கைப்பற்றி, ஏறத்தாழக் கால் நூற்றாண்டு அப்பகுதியை ஆண்டான். ஆக்கூர்க் கல்வெட்டில் மூன்றாம் கிருஷ்ணனுடைய சிற்றரசனான பூதுகன் என்பான், இராசாதித்தனைத் தக்கோலத்தில் கொன்றான் என்றசெய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. தக்கோலம் தென்னிந்தியாவில் ஒரு தனிச்சிறப்பு வாய்ந்த இடம் என்றும், அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகள், சோழர்கள் அவர்களுடைய சமகால மன்னர்கள் ஆகியவர் வாழ்க்கையில் பெரிய மாறுதல்களை ஏற்படுத்த, வரலாற்றையே திருப்பியுள்ளன எனவும் அறிகிறோம்.

### மூன்று கோயில்கள் :

முற்காலத்தில் இவ்வூரில் மூன்று கோயில்கள் இருந்தன. தற்போது பாழடைந்த நிலையிலுள்ள விஷ்ணு கோயிலின் சுவரில் காணப்படும் முதல் இராசேந்திரனுடைய கல்வெட்டொன்றில் அக்கோயிலின் இறைவர் 'இராசராசத் திருநாராயண விண்ணகரஆழ்வார்' என்று முதல் இராசராசன் பெயரால் அழைக்கப்படுவதால், அக்கோயில் முதல் இராசராசன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாகலாம்.

### திருவூறல் மகாதேவர் :

மற்றொரு சிவன்கோயில் பாலேசுரர் கோயில் என்று வழங்கப்பட்டது. அதன் சுவரில் உள்ள மூன்று கல்வெட்டுக்களும் முறையே, முதல் இராசேந்திரன், விக்கிரமசோழன், திரிபுவன இராசேந்திரசோழன் (இரண்டாம் இராசேந்திரன் போலும்) ஆகியவர் காலத்தைச் சேர்ந்தவை. முதல் கல்வெட்டு திருப்பாலூறல் மூமலையீசுவரத்து மகாதேவருக்குக் காலைப் பூசனைக்கு அபிடேகத்தின்பொருட்டு 32 பசுக்கள் தானமாக விடப்பட்ட செய்தியைக் குறிக்கிறது. திருப்பாலூறல் தக்கோலத்தின் ஒரு பகுதி எனவும், அங்கிருந்த இயற்கை ஊற்றொன்றின் நீர் பால்போல் வெண்மையாயிருந்ததால், அப்பகுதிக்குத் திருப்பாலூறல் என்ற பெயர் ஏற்பட்டது எனவும் கூறுவர். இவ்வறக் கட்டளை முதல் இராசேந்திரனுடைய தாயாரின் நினைவு குறித்து வழங்கப்பட்டதெனவே, இக்கோயில் முதல் இராசேந்திரன் காலத்தை ஒட்டியதாக இருக்கலாம். தக்கோலத்திலுள்ள மூன்று கோயில்களிலும் மிகப் பழமையானதும், முக்கியமானதும் 'ஜலநாதேசுவரர்' கோயில் என்று, தற்போது வழங்கும் திருவூறல் மகாதேவர் கோயிலாகும். அது விசயமன்னர் காலத்தில் 'நந்திதீர்த்தம்' என வழங்கப்பட்டது. அக்கோயிலின் சுவரிலுள்ள கல்வெட்டுக்கள் 9ஆம் நூற்றாண்டு முதல் 16ஆம் நுற்றாண்டுவரை பரவியுள்ளன. ஒரே ஒரு கல்வெட்டே அண்மைக் கால எழுத்தில் அமைந்துள்ளது.

### கல்வெட்டுகள் :

இங்குள்ள கல்வெட்டுக்களில் மிகப் பழமையானது அப்பகுதியை ஆண்ட கோவிமலாதித்தன் என்ற வாணர் (பாணர்) தலைவனுடைய 3ஆம் ஆண்டைச் சார்ந்தது. இராசகேசரியின் பெயரில் அமைந்த மூன்று கல்வெட்டுக்களின் காலத்தை வரையறுக்கமுடியவில்லை. இக்கோயிலிலுள்ள மிகப்பழைய சோழர் கல்வெட்டுக்களில் ஒன்று இராசகேசரி வர்மனுடைய 21ஆம் ஆண்டைச் சார்ந்தது. அது திருவூறலிலுள்ள கற்றளிமகாதேவருக்கு ஒரு விளக்கு எரிப்பதற்கு 30 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. பழைய கல்வெட்டுக்களில் மற்றொன்றில் இராசகேசரியின் 24ஆம் ஆண்டைச் சார்ந்தது. இவ்விரண்டும் முதல் ஆதித்தன் காலத்தவையாகும். இவ்விருபத்துநான்காமாண்டுக் கல்வெட்டு மாரமரையருடைய புதல்வனான இரண்டாம் பீருதிவீபதி திருவூறல் மகாதேவருக்கு, ஒரு சூரிய கிரகண தினத்தன்று ஒரு வெள்ளிக் கெண்டி வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

### ஆதித்த சோழன் கல்வெட்டு :

1. ''ஸ்வஸ்தி ஸ்ரீகோவிராசகே
2. சரி பன்மர்க்கு யாண்டு
3. இருபத்து நாலாவது ஆ
4. னிலைத்தலைப் பிறையில்
5. தீண்டிய சூரிய கிரஹணத்
6. து நாளன்று திருஊறல் மாதேவ
7. ர்க்கு மாரமரையர் மகனார்
8. பிரதீபதியார் குடுத்த வெ
9. ள்ளிக் கெண்டி நிறை முன்னூ
10. ற்று ஒரு பத்தேழு கழஞ்சு
11. இது பன்மாஹே சுவர ரட்சை''.

திருப்புறம்பியப் போரில் அபராஜித பல்லவனுடைய பக்கத்தில் இருந்து வரகுண பாண்டியனோடு போரிட்ட கங்க குலத்தலைவன் ஆன முதல் பிருதிவீபதியின் பெயரான இவ்விரண்டாம் பிருதிவீபதி முதல் பராந்தகனுடைய சிற்றரசன் ஆகி அவனிடம் நன்றி அறிதலோடு பழகி, அவன் வாணர்களுடைய நாட்டின்மீது படையெடுத்த போது, அவன் பக்கம் உதவியாகச் சேர்ந்து வாணர்களையும் அவர்களுக்கு உதவிய இரட்டமன்னனான இரண்டாம் கிருஷ்ணனையும் திருவல்லப்போரில் முறியடித்த வீரத்தைப் பாராட்டி, அவனை முதற் பராந்தகன், வாணநாட்டுச்சிற்றரசன் ஆக்கி, அவனுக்குச் செம்பியன் மாவலி வாணராயன் என்ற பட்டமும் வழங்கினான் என்று வரலாறு கூறுகிறது. முதல் பராந்தகனுடைய கல்வெட்டுக்கள், அவனுடைய 7ஆம் ஆண்டு முதல் 35ஆம் ஆண்டுவரை பரவிக் கிடக்கின்றன. இங்குள்ள பெரியகுளத்தில் படகொன்று செலுத்துவதற்கு நங்கை ஒருத்தி நன்கொடை வழங்கினாள். மற்றொருத்தி அக்குளத்தை நன்முறையில் பராமரிக்க நிவந்தம் அளித்தாள். 24ஆம் ஆண்டுக் கல்வெட்டு இறைவனுடைய கவசத்திற்காக 455 கழஞ்சு பொன் வழங்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது.

சோழமன்னன் முதல்பராந்தகனுடைய மகளான வீரமகாதேவி இரட்டமன்னன் கோவிந்த வல்லவரையன் என்ற நான்காம் கோவிந்தனை மணந்தாள். அவன் மக்களிடையே நற்பெயர் பெறாததால் மூன்றாம் அமோகவர்ஷன் அவன் நாட்டைக் கைப்பற்றி அவனை அப்புறப்படுத்தவே, அவன் வாணர் நாட்டின் எல்லையில் வாழாலானான். இவ் வீரமாதேவி முதற்பராந்தகனுடைய 31ஆம் ஆண்டில் இவ்வூர் இறைவனுக்கு இரண்டு விளக்கு எரிப்பதற்கு நன்கொடை வழங்கினாள். கன்னரதேவனுடைய 27ஆம் ஆண்டில் (கி.பி.967) தக்கோலம், சோழரிடம் இருந்து இரட்டர் வசம் கைம்மாறியபோது உள்ளூர் மடத்தின் தலைவர் ஒருவர், இவ்விறைவனுக்கு விளக்கெரிக்க நன்கொடை வழங்கினார்.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டுக்கள் பலவற்றில் மாசிமகப் பெருவிழாவும் அதனுடைய ஆறாம் நாள் சிறப்பு விழாவும் குறிப்பிடப்

பட்டுள்ளன. இத் தக்கோலம், முதல் இராசராசன் காலத்தில் க்ஷத்திரிய சிகாமணிபுரம் எனவும், முதல் இராசராசன் காலத்தில் இரட்டபாடிகொண்ட சோழபுரம் எனவும், முதற் குலோத்துங்கன் காலத்தில் பல்லவபுரம் எனவும், குலோத்துங்கசோழபுரம் எனவும், காஞ்சிபுரம் விசயகண்ட கோபாலன் காலத்திலும் விசயநகரமன்னர் காலத்திலும் வடமுடிகொண்ட சோழபுரம் எனவும் வழங்கப்பட்டதாக அறிகிறோம்.

**கோயில் அமைப்பு :**

இக்கல்வெட்டுக்கள், திருவூறல் மகாதேவர் கோயில், 16-ம் நூற்றாண்டு வரை, அரசர்கள் முதல் பொதுமக்கள் வரை, எல்லோருடைய நன்கொடையையும் பெற்றுச் சிறப்புற்ற செய்தியைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இனி தக்கோலத்திலுள்ள திருவூறல் மகாதேவர் கோயிலாகிய ஜலநாதஈசுவரர் கோயில் அமைப்பு பற்றி நோக்குவோம்.

இக்கோயில் கிழக்குப் பார்த்த சந்நிதியையுடையது. கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 18 அடி 4 அங்குலம். அடித்தளம் 4 அடி 4 அங்குலம் உயரத்தில் அமைந்துள்ளது. அடித்தளத்தின் தொடக்கத்தில் யாளி வரிமானம் உள்ளது. அர்த்த மண்டபம் கருவறையை ஒட்டி 16 அடி 2 அங்குலம் முன்னோக்கி அமைந்துள்ளது. அதன் முகப்பில் இரு துவாரபாலகர் சிலைகள் உள்ளன. அர்த்த மண்டபத்தின் வெளிச்சுவர்களில் கணபதி, துர்க்கை, அர்த்தநாரீசுவரர் சிலைகளும், கருவறையின் வெளிச்சுவர்களில் தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன் என்ற சிலைகளும் உள்ளன. அரைத்தூண்கள் 5 அடி உயரமுள்ளவை. கொடுங்கை மனிதத் தலையை நடுவில் கொண்ட கூடுகளால் அணி செய்யப்பட்டுள்ளது. அதன் ஓரங்களில் வட்டங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூதகணவரிசையைக் காணலாம்.

இக்கோயில் 9-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், வாணர்களால் கட்டப்பெற்று, பின்னர்ச் சோழர்களால் சிறப்பிக்கப்பட்ட கட்டடத்தை உடையதாதல் வேண்டும்.

**ஊர்ப்பெயர்கள் :**

தக்கோலம் என்ற வல்லபுரம், மேல்மலை ஆற்றூர்நாட்டு இராச மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் என்ற உரகையூர் (இது தேவதான கிராமம்), மணவில் கோட்டத்து பாசலி, நாட்டுப்பாசலி, மணவில்கோட்டத்துப் புரிசை நாட்டுத் திருவூறல்புரத்தைச் சேர்ந்த அபராசிதச் சதுர்வேதிமங்கலம் (அபரா ஜிதன்-பல்லவ மன்னர் பெயர்), மணவில்கோட்டத்துப் பன்மா நாட்டுப்பண்ணை, வயல்பருந்தூர் (தேவதான கிராமம்). தக்கோலம் என்னும் ஊர் க்ஷத்திரிய சிகாமணிபுரம், இரட்டபாடி கொண்ட சோழபுரம், குலோத்துங்கசோழபுரம், வடமுடிகண்ட சோழபுரம் எனப்பல பெயர்களைப் பெற்றிருந்தது. அது ஒரு தனியூராகவும் காட்சியளித்தது.

**வரலாற்றுச் சிறப்பு :**

முதற் பராந்தக சோழன், தென்னாடு முழுவதையும் வென்றான். அவன் காலத்தில் இராட்டிரகூடர் பம்பாய் மாநிலத்தை ஆண்டு வந்தனர். மூன்றாம் கிருஷ்ணன் என்ற கன்னரதேவன் ,சோழப் பெருநாட்டின்மீது படையெடுத்தான். அவனுக்குத் துணையாக அவனது மைத்துனனான இரண்டாம் பூதுகன் என்ற கங்க அரசனும் வந்தான். இராட்டிரகூடப் படையெடுப்பை எதிர்பார்த்துப் பார்த்துப் பராந்தகன் மகனான இராசாதித்தன் திருநாவலூர்ப் பகுதியில் பெரும்படையுடன் தங்கியிருந்தான். அவனுக்கும் கன்னரதேவனுக்கும் போர் மூண்டது. இராசாதித்தன் முதற்போரில் கன்னரதேவனை முறியடித்தான். பின்னர் இரு திறத்தார்க்கும் தக்கோலத்தில் கடும்போர் ஏற்பட்டது. போர்க்களத்தில் யானைமீதிருந்த இராசாதித்தன் கங்கஅரசனால் கொல்லப்பட்டான். இதனால் சோழர் சேனை சிதறுண்டது. கன்னரதேவன் பெற்ற இந்த வெற்றியினால், பராந்தகன் சோழப் பெருநாட்டில் பெற்றிருந்த பாணப்பாடி, தொண்டைநாடு என்பனவற்றை இழந்தான். தக்கோலம் என்னுமிடத்தில் நடந்த கடும்போரே இத்தகைய வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாகும்.

**தலவரலாறு :**

இந்நாளில் தக்கோலம் என்று வழங்கும் இந்தத் தலம், திருஞானசம்பந்தப் பெருமானால், திருவூறல் என்னும் பெயரால் புகழ்ந்து போற்றப்பெற்றது. நந்தியின் திருவாயினின்று தண்ணீர் ஊறப் பெறுவதனால், இதற்குத் திருவூறல் எனப் பெயர் அமைந்தது. சுவாமி பெயர் சலநாதஈசுவரர் என வழங்குகின்றது. இது சுரர் குருவுக்கு இளையமுனிவரான சம்வர்த்த முனிவர் பூசித்து வழிபட்ட தலம் எனப் பெரியபுராணம் கூறுகிறது.

குசைத்தலையாறு என்னும் கல்லாற்றின் கரையில் உள்ள இத்திருக்கோயிலை அடுத்து, வடக்கு மதிலோரத்திலுள்ள கங்காதரர் சந்நிதியில் மேற்குப் பிராகாரத்தில் இடபத்தின் வாயிலிலிருந்து எக்காலத்தும் எந்நேரத்தும் தண்ணீர் பெருகி வருவது, இத்தலத்தின் பெருமையைக் கண்கூடாக விளக்குவதாகும். மேலும் பிற இடங்களிலெல்லாம் வறட்சியான பலகாலங்களிலும்கூட, இவ்வூரில் தண்ணீர்ப் பஞ்சம் வந்ததே கிடையாது. மேலும் இவ்வூரிலிருந்து தான், அருகில் உள்ள அரக்கோணத்திலுள்ள பல நிறுவனங்களுக்குத் தொடர்ந்து எப்பொழுதும் தண்ணீர் கிடைத்து வருகிறது என்பது, குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

தொண்டை நாட்டில் இத்தலம் 13ஆம் தலமாக விளங்குகின்றது. தக்கோலம் என

இன்று வழங்கும் இந்தத் தலம், திருஞானசம் பந்தமூர்த்தி சுவாமிகளின் அருள்வாக்கால் திரு ஊறல் எனப் போற்றிப் புகழப்பட்டுள்ளது. சுவாமியின் திருப்பெயர் -உமாபதி ஈசுவரர்; அம்மையின் திருப்பெயர் -உமையம்மை. இவ் அற்புதத் தலம் செங்கற்பட்டு - அரக்கோணம் இருப்புப் பாதைப் புகைவண்டித் தொடரில், தக்கோலம் நிலையத்திலிருந்து, கிழக்கே நான்கு மைல் தூரத்திலுள்ளது. இத்தலத்தின் தேவா ரப்பாடல்கள் சில வருமாறு:

மாறில் அவுணர் அரணம் அவை
மாயவோர் வெங்கணை யாலன்று
நீறெழ வெய்த எங்கள்
நிமல னிடம் வினவில்
தேறரும் பொழிலுந் திகழ்
செங்கயல் பாய்வய லுஞ்சூழ்ந்த
ஊறல் அமர்ந்த பிரான்
ஒலியார் கழல் உள்குதுமே. (1)

கறுத்த மனத் தினொடுங் கடுங்காலன்
வந்தெய்தலுங் கலங்கி
மறுக்குறு மாணிக் கருள்
மகிழ்ந்தா னிடம் வினவில்,
செறுத்தெழு வாளரக்கன் சிரந்
தோளும்மெய்யுந் நெரிய வன்று
ஒறுத்தருள் செய்த பிரான்திரு
ஊறலை உள்குதுமே. (2)

கோடலிரும் புறவிற் கொடி மாடக்
கொச்சையர் மன் மெச்ச
ஒடு புனல் சடைமேற்
கரந்தான் திருஊறல்
நாடலரும் புகழான் மிகுஞான
சம்பந்தன் சொன்ன நல்ல
பாடல்கள் பத்தும் வல்லார்
பரலோகத் திருப்பாரே. (3)

—சம்பந்தர்

# திருக்கழுக்குன்றம்

# சங்கு தீர்த்தப் புஷ்கர மேளாவும், இலட்ச தீபப் பெருவிழாவும்

சென்னைக்கு அருகில், செங்கற்பட்டிற்கும் மாமல்லபுரத்திற்கும் இடையில் உள்ள திருக்கழுக் குன்றம், தொண்டைநாட்டுத் தேவாரப் பாடல் பெற்ற சிவத்தலங்களுள், மிக்க சிறப்பு வாய்ந்த ஒரு பெருந் தலம். சைவசமய ஆசிரியர்கள் நால்வரும், இத்தலத்தினைப் புகழ்ந்து பாடியுள்ளனர். அருண கிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல்களும், இதற்கு உண்டு. அந்தகக்கவி வீரராகவ முதலியார், இதற்குத் தலபுராணம் பாடியுள்ளார்.

வேதங்களே மலைவடிவம் கொண்டு அமைந்திருக்க, ''வேதகிரீசுவரர்'' என்னும் பெயரில், திரு மலைச் சொக்கம்மையுடன் சிவபெருமான் எழுந்தருளி விளங்குகின்றார். ஊர் நடுவில் உள்ள தாழக் கோயிலில் உள்ள சுவாமிக்குப் ''பக்தவத்சலர்'' என்றும், அம்பிகைக்குத் ''திரிபுரசுந்தரியம்மை'' என் றும் பெயர்கள் வழங்கும்.

இங்குள்ள திருக்குளம் ''சங்குதீர்த்தம்'' என்னும் பெயர் உடையது. 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை, கன்னியா ராசியில் குரு புகும்போது, இத்திருக்குளத்தில் சங்கு பிறக்கும். அதனாலேயே இதற்கு சங்குதீர்த்தம் என்னும் பெயர் ஏற்பட்டது.

அம்முறையில் இவ்வாண்டு அடுத்த மாதம் 19-9-80 அன்று, ''சங்கு தீர்த்தப் புஷ்கர மேளா'' என்னும் பெருவிழா நடைபெறவுள்ளது. வட இந்தியாவில் நிகழும் கும்பமேளாவும், கும்பகோணத்தில் நடைபெறும் மகாமகவிழாவும் போன்று இங்கு 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் சங்குதீர்த்தப் புஷ்கர மேளாவுக்கும், பல லட்சக்கணக்கான மக்கள் பெருந்திரளாக வந்து வழிபட்டு மகிழ்வர். அதனை ஒட்டி, அருள்மிகு வேதகிரீசுவரர்க்கு இலட்ச தீபப் பெருவிழாவும், அன்று (19-9-80) மிகவும் சிறப்புற நடைபெற உள்ளது.

ஆதலின் பக்தகோடிகள் அனைவரும் பெருந்திரளாக வந்து, அருள்மிகு திருமலைச் சொக்கம்மை உடனுறை வேதகிரீசுவரரையும், அருள்மிகு திரிபுர சுந்தரியம்மை உடனுறை பக்தவத்சல ஈசுவரரையும் வழிபட்டு, இம்மை மறுமை நலங்கள் அனைத்தும் எய்தி, இன்புற்று வாழ்வார்களாக!

**—ஆசிரியர்**

# ஜேஷ்டாதேவி

வித்துவான் திரு. வே. மகாதேவன், M.A.,

ஆடுதுறை.

**முன்னுரை:**

பல கோயில்களில் வழிபாடுபெறாது வாழும் திருவுருவங்கள் சிலவுண்டு. குளக்கரைகளிலும் திருக்கோயில்களின் வெளிப்புறங்களிலும் பேணுவாரற்றுக் காணப்படும் உருவங்களில், அருவருப்புத்தரும் ஒரு பெண்ணின் உருவம் நடுவில் இருக்க, வலப்புறம் மாட்டுத் தலையுடையதொரு மனித உருவமும், இடப்புறம் ஒரு கன்னியின் உருவமும் உடையதாக அமையும் கற்சிலைகளும் இருத்தலை நம்மில் பலர் கண்டிருப்பர். இத்திருவுருவம் யாருக்குரியது? என்னும் வினா எழினும், தீர்த்துக் கொள்ளுவதற்கு வழி எளிதில் கிட்டாதெனலாம். இவ்வுரு மூதேவிக்கு உரியது. இவ்வம்மை சங்க காலம் முதலே அறியப்பட்ட பெருமை சான்றவள். பல்லவர், சோழர் காலங்களில் வழிபடப்பட்ட பெருமை சான்றவள். எனினும் பிற்காலத்தில் வழிபடப் பெறாதவளாகி, திருக்கோயில்களில் இருந்து அப்புறப்படுத்தப்பட்ட நிலையையும் அடைந்தாள். தீய நெஞ்சினர்க்குத் தீயாக விளங்கும் இத் தேவியின் வழிபாடு பற்றிக் காண்போம்.

**வள்ளுவர் வாக்கில்**

நுண்பொருளுக்குப் பருப்பொருள் வடிவம் தருதல் நம்மவர் இயல்பு. அறிவெனும் நுண்பொருள் - தூயதாய் அழகியதாய்த் துலங்குவது. இதனை, வெள்ளைத் தாமரையில் வீற்றிருக்கும் கலைமகளாக வழிபட்டனர் நம்மவர். இதே முறையில் தீமைக்கும் ஓர் உருக் கொடுத்துத் தெய்வமாக்கி அத்தெய்வம் தீய நெஞ்சினரைத் தீச்செயலினரைப் பற்றும்; அவர்தம் வாழ்வுப் பாங்கினைக் குலைக்கும் எனக் கருதினர். அத் தெய்வத்தைத் திருமகளின் மூத்தாள்-மூதேவி என்றனர். (ஜேஷ்டாதேவி-மூத்தவள் எனப் பொருள்படும்.)

தீமை என்னும் நுண்பொருளுக்கு மூதேவியுருவந் தரப்பெற்றமையை ஒரு குறட்பாத் தெளிவுறுத்துகிறது. சூது-மிக மிகத் தவறானதொரு தீச்செயல். இத் தீமையை மூதேவியாகப் பேசுகிறார் திருவள்ளுவர்.

> அகடுஆரார் அல்லல் உழப்பர் சூதுஎன்னும்
> முகடியால் மூடப்பட் டார் (936)

என்பது குறட்பா. 'ஊக்கமுடையவனுடைய வீட்டிற்கு ஆக்கம் வழிக்கேட்டுச் செல்லும்' என்றுகூறும் வள்ளுவர், 'மடியுள்ளவன் இல்லில் மூதேவி வாழ்வாள்; மடியற்றவன் மலரடிகளில் திருமகள் இனிது வாழ்வாள்' என்று வேறுபடுத்திக் காட்டுகிறார்.

> மடியுளாள் மாமுகடி என்ப, மடியிலான்
> தாளுளாள் தாமரையி னாள்''

என்பது வள்ளுவர் வாக்கு. ''ஒரு மனிதன் மற்றவருடைய நல்வாழ்வினைக் கண்டு பொறாமை கொள்கிறான். அம்மனிதனைக் காண்கிறாள் திருமகள். அவன்மீது பொறாமை கொள்கிறாள். தன்னைவிட மூத்தவளாக இருக்கும் மூதேவிக்கு அவனை அறிமுகப்படுத்தி அவளுக்குத் தங்க இடமேற்படுத்துகிறாள்'' என்று பேசுகிறது,

> 'அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
> தவ்வையைக் காட்டி விடும்'

என்னும் குறட்பா. இக்குறட்பாவினால் அக்காலச் சமய நூலார் தீவினையாளர் ஜேஷ்டாதேவியின் நோக்கிற்குட்பட்டுத் துன்புறுவர் என்றும், சேட்டை சீதேவிக்கு முன்பிறந்தவள் (தவ்வை) என்றும் கருதியமை புலனாகிறது.

**புராண வரலாறுகள்:**

சங்ககாலம் முதலே காணப்பெறும் மூதேவி பற்றிய புராணச் செய்திகள் இடைக்காலத்தில் பெருகி வழங்கலாயின. 'திருப்பாற்கடலைத் தேவரும் அசுரரும் கடைந்தனர். கடையும் காலத்தில் திருமகளுக்கு முன்னர் மூதேவி தோன்றினாள். இவளைக் கபிலமுனிவர் தன் மனைவியாகக் கொண்டார். எனவே இவள் கபில பத்தினி எனப்படுவாளாயினாள்' எனக் கூறுகிறது புராணம். இலிங்கபுராணம் இவற்றிலிருந்து சற்று வேறுபட்ட வரலாற்றினைக் கூறுகிறது. 'தேவாசுரர் திருப்பாற்கடலைக் கடைந்தனர்; கடலினின்றும் காளகூட விஷம் என்னும் நஞ்சு வெளிவந்தது. நஞ்சினையடுத்து ஒரு நங்கை தோன்றினாள். அவளே ஜேஷ்டாதேவி. இவளைத் துஸ்ஸஹ முனிவன் என்பவன் மணந்துகொண்டான். தன் மனைவி தன்னால் உணர்ந்து கொள்ளவியலாத உருவும் உணர்வும் உடையவள் என்பதனை

அறிந்தான். அவன் விஷ்ணுவைப் புகழ்ந்தாலோ, சிவபெருமானைப் பரவினாலோ, நல்ல செய்திகளைச் செய்வதனைப் பற்றிப் பேசினாலோ, இரு கைகளாலும் தன் மனைவி காதுகளிரண்டையும் மூடிக் கொள்வதனைக் கண்டான் அம்முனிவன். ஒருகால் அவன் மூதேவியுடன் முனிவர் வாழும் தவ வனம் நோக்கிச் சென்றான். அவள் அவனுடன் வரமறுத்தாள்; வீடு திரும்பினாள். முனிவனும் இல்லம் திரும்பி வந்து, 'நான் இனி உனக்கு இடையூறு விளைக்கும் செயல்களைப் புரியேன்' என்று உறுதியளித்தான். உளம் கலங்கியவனாக அவளுடன் உறைபவனாயினன். அவ்வாறு வாழும் காலத்தில் மார்க்கண்டேய முனிவர் அங்கு வந்தார். அவரிடம் துஸ்ஸஹ முனிவன் உள்ளம் திறந்து பேசினான்; தன் மனைவியினைப்பற்றி எடுத்துரைத்தான். 'எவ்விடங்களுக்குச் செல்லின் தன் மனைவிக்கு மனத்தளர்ச்சி விளையாது' என்றுரைக்குமாறும் வேண்டினான். மார்க்கண்டேயர், ''முனிவ! தீயசெயல்கள் விளையுமிடங்களே உன் மனைவிக்கு உகந்தவை. நீ, கணவன் மனைவியர் கருத்து வேறுபட்டுச் சண்டையிட்டுக் கொள்ளும் இடங்களுக்கும், புத்தம் மற்றும் வைதீகத்திற்குப் புறம்பான சமய வழிபாடுகள் நடைபெறும் இடங்களுக்கும், சிறுவர்க்கு நல்லுணவிடாது மூத்தோர் உண்டு களிக்கும் இல்லங்கட்கும், மனைவியுடன் செல்லத் தக்கது. நன்மைக்கு உதவாத சொற்கள் பயிலுமிடங்களையும் அந்நங்கை விரும்புவாள்'' என்று அருளிப் பிரிந்தார். துஸ்ஸஹ முனிவன் தன்மனைவியிடம், 'ஜேஷ்டா! நாம் எவ்வித இடையூறும் இல்லாத நல்லிடமாகத் தங்கி வாழ்வதற்காக இரசாதல லோகத்திற்குச் செல்லப் போகிறேன்' என்று கூறினான். மூதேவியையும் உடன் அழைத்துக் கொண்டு ஆசிரமத்துக்கு அருகில் உள்ள ஒரு குளத்தை அடைந்தான். ஜேஷ்டா தேவி, 'நீ திரும்பும் வரை நான் எவ்வாறு உணவு பெறுவேன்' எனத் தன் கணவனை வினவினாள். முனிவர் 'மகளிர் உனக்குப் பலியுணவு தருவர்; உணவு கொள்ளுமாறு வேண்டாதவர் இல்லத்திற்குச் சென்று பலியுணவு கொள்ளற்க' என்று விடை கூறினான்; நீரில் குதித்தான்; சென்றவன் மீளாதவனாயினன். தன் கணவனின் வருகையை எதிர்நோக்கி ஜேஷ்டாதேவி குளக்கரையிலும், ஊர்ப்புறங்களிலும், மலைகளிலும் உறைவாளாயினாள். இவ்வாறு அலையும் காலத்தில் திருமாலைச் சந்தித்துத் தன் தனிமையினால் ஏற்படும் சலிப்பினைத் தீர்க்குமாறு வேண்டினாள். திருமால், 'சிவபெருமான் முதலான பிற தெய்வ வெறுப்புணர்வுடன் என்னை மட்டுமே வழிபடுபவர் இல்லங்களிற் சென்றுறைக' என வரமளித்தார். விஷ்ணு, தான் அளித்த வரம் தன்னைத் தாக்காமலிருக்க உருத்திர மந்திரம் சொல்லி உய்ந்தார். எனவேதான் வைணவரும், பெண்டிரும் மூதேவிக்குப் பலியுணவு தருகின்றனர்' என இலிங்கபுராணம் கூறுகிறது.

**தமிழ் நிகண்டுகள்:**

'மூதேவி' பல பெயர்களுடன் மக்களால் குறிக்கப்பெறுகிறாள். முகடி தவ்வை கலதி மூதேவி காக்கைக்கொடியாள் கழுதைவாகனி சேட்டை கெடலணங்கு ஏகவேணி இந்திரைக்கு மூத்தாள் என்னும் பெயர்கள் இவளைக் குறிப்பனவாகத் தமிழ் நிகண்டுகளில் கூறப்பட்டுள்ளன. மூதேவி, கழுதையை வாகனமாகக் கொண்டவள்; காக்கைக் கொடியினையுடையவள்; துடைப்பத்தைப் படையாக உடையவள் என்பதனை ''வாகனம் கழுதை படைதுடப்பம் காகங் கொடியெனக் கழறல் வேண்டும்'' என்னும் பிங்கல நிகண்டுப் பகுதியால் அறியலாம்.

**உருவ அமைப்பு:**

ஜேஷ்டாதேவி தமிழகக் கோயில்கள் பலவற்றில் முற்காலத்தில் எழுந்தருள்விக்கப்பெற்றாள். இச் சேட்டையுருவில் இரத்தஜேஷ்டா நீலஜேஷ்டா என்னும் இரு வகைகள் இருந்தமை விஷ்ணுதர்மோத்திரம் என்னும் நூலின்வாயிலாக அறியப்பெறுகிறது. ஜேஷ்டாதேவியின் உரு மூன்று பகுதிகளை யுடையது. நடுவில் சேட்டையின் உருவம் அமையும். ''ஜேஷ்டா தேவி இரண்டு கைகளும் இருகண்களும் உடையவள். பெரும் கன்னங்களும் உந்திவரை ஞாலும் பெருந்தனங்களும், பேழை வயிறும் உடையவள். உயர்ந்த நாசியும், தொங்கும் கீழுதடுகளும் உடையவள். பத்ராசனத்தின்மீது வீற்றிருப்பவள். இருகால்களையும் தொங்குமாறு விட்டு அமர்பவள்; ஒற்றைமுடிச்சினையுடைய கூந்தலையுடையவள். முகத்தில் திலகத்துடன் காணப்பெறுபவள்'' என நூல்கள் கூறும்.

சேட்டையின் உருவம் வலக்கரம் நீலோற்பல மலரை ஏந்தியதாகவும் இடதுகரம் இருக்கையின்மீது வைக்கப் பெற்றதாகவும் இருக்கும். சிலநேரங்களில் வலதுகரம் நீலோற்பலம் தாங்கியதாகவும், இடதுகரம் அபயஹஸ்தமாகவும் இருப்பதுண்டு. பல சிலைகளில் இடதுகரம் அருகில் உள்ள பெண்ணின்மேல் வைக்கப்பெற்றதாகவே காணப்படுகிறது.

ஜேஷ்டாதேவியின் வலப்புறம் ஒரு கலப்புருவம் காணப்பெறும். இவ்வுரு மனிதஉடலும் மாட்டுத்தலையும் உடைய ஓராணின் உருவமாகும். இது வலதுகரத்தில் தண்டமும் இடதுகரத்தில் பாசமும் ஏந்தியதாக அமையும். இவ்வுருவின் வலதுகால் தொங்கவிடப்பட்டதாகவும், இடதுகால் மடிக்கப்பட்டதாகவும் இருக்கும். பூர்வகாரணாகமம் இவ்வுருவத்தினை மூதேவியின் எழுச்சியற்ற மகன் என்று கூறுகிறது.

ஜேஷ்டாதேவியின் இடதுபுறம் ஒரு பெண்ணின் உருவம் காணப்படுகிறது. இவள் மணமாகாத கன்னியாவாள். இவள் 'அக்னிமாதா' என்னும் பெயருடையவள் என்று அம்சுமத்பேதாகமம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது. இவளுடைய இடது கால் தொங்குவதாகவும் வலதுகால் மடிக்கப்பட்டதாகவும் அமையும்; வலக்கரம் நீலோற்பல மலர் ஏந்தியதாக இருக்கும். பூர்வ காரணாகமத்தில் இவள் மூதேவியின் சகோதரியாகக் கூறப்பட்டுள்ளாள்.

### எழுந்தருள்விக்குமிடம்:

பழைய நூல்கள், ஊரின் வடகிழக்கில் சிவன்கோயிலும், மேற்குப் புறத்தில் திருமாலின் விண்ணகரமும், கிழக்கில் சூரியன் கோயிலும், தெற்கே துர்க்கை கோயிலும், வடமேற்கே முருகன் கோயிலும் அமையும் எனக் கூறுகின்றன. இந்நூல்களில் சேட்டையின் ஆலயம் குளக்கரைகளில் அமையும் என்று கூறப்பட்டுள்ளது. குளக்கரைகளில் சேட்டை கோயில் கொள்ளுவதற்குரிய காரணத்தை இலிங்கபுராணத்தில் இருந்து ஊகித்தறியலாம்.

சங்ககாலத்திற்குப் பின்னால் பல்லவர் காலத்தில் ஜேஷ்டாதேவி, வழிபாடு சிறப்புற்றிருந்தது. பல்லவர் கால ஆலயங்களில் ஜேஷ்டாதேவியின் உருவம் காணப்பெறுதல் இக்கருத்தினை வலியுறுத்துவதாகும். இராஜசிம்ம பல்லவன் எடுப்பித்த காஞ்சிக் கயிலாசநாதர் கோயிலில் ஒரு சிறந்த உருவம் காணப்படுகிறது. காஞ்சியிலும் பிற இடங்களிலும் உள்ள பல்லவர் கால ஆலயங்களிலும் சேட்டையின் உருவம் இருத்தலைக் காணலாம்.

சோழர் காலத்தில் சேட்டைவழிபாடு சிறப்புற்றிருந்தமையைக் கல்வெட்டுச் சான்றுகள் விளக்குகின்றன. பார்த்திவேந்திரவர்மன் என்னும் சோழ அரசனுடைய மூன்றாம் ஆட்சியாண்டுக்குரிய உத்தரமேரூர்க் கல்வெட்டு, ஜேஷ்டாதேவியின் வழிபாடுபற்றிக் குறிப்பிடுகிறது. ''உத்தரமேரூரின் ஒருபகுதியாகிய குமண்பாடி என்னும் இடத்தில் சேட்டையார் திருக்கோயில் இருந்தது. இவளுக்கு அமுது படையலும் அருச்சனைகளும் நிகழ்ந்தன. இவ்வாறு வழிபாடாற்ற 1148 குழிநிலம் தரப்பெற்றிருந்தது. மாயிலட்டி என்பவனிடம் முதற்பொருள் கொண்டு, 'நம்மூர் குமண்பாடி சேட்டையாருக்கு அர்ச்சனா போகத்திற்கும் திருஅமுதுக்கும் வைத்த பூமியை'ச் சபையினர் இறையிலியாக்கினர்'' என்று கல்வெட்டுக் கூறுகின்றது.

இராசராசனின் தஞ்சைக் கல்வெட்டொன்றால் தமிழகத்தில் பல ஊர்களில் சேட்டைக்குக் கோயில் இருந்தமை அறியப்பெறுகிறது. இராசராசன் தான் எடுப்பித்த தஞ்சைக் கோயிலுக்குப் பல ஊர்களில் இருந்து அரசுக்குக் கிடைக்கும் வரிநெல் வருவாயை உரியதாக்கினான். அவ்வூர்களைக் குறிக்கும் கல்வெட்டு நில விவரங்களைக் கூறும்போது, அவ்வூர்களில் இருந்த பல சிற்றாலயங்களைப் பற்றிய செய்திகள் அறியப்பெறுகின்றன. மழநாடு எனப்பட்ட ராஜாஸ்ரய வளநாட்டில் பாச்சில் கூற்றத்தில் இருந்த மீப்பலாற்று ஆன்பனூர் என்னும் ஊரிலும், நித்தவினோத வளநாட்டில் வெண்ணிக் கூற்றத்தில் இருந்த நகர் வெண்ணியில் வெண்ணித்திறப்பான்பள்ளி என்னும் பகுதியிலும், சேட்டையார் கோயிலும் திருமுற்றமும் இருந்தமை தஞ்சைக் கல்வெட்டொன்றால் அறியப்பெறுகிறது. இச்சான்றால் தமிழகத்து ஊர்களில் மூதேவிக்கு முற்றங்களுடன் கூடிய சிறு கோயில்கள் இருந்தமை அறியப்பெறும்.

முதல் இராசேந்திர சோழனின் 25ஆவது ஆண்டு நாள் 112ஆவதற்குரிய எண்ணாயிரம் என்னும் ஊரிலுள்ள கல்வெட்டு ஒன்று, 'அரசனுடைய ஆணைப்படி ராசராச சதுர்வேதிமங்கலத்துச் சபையார் மும்முடிச்சோழன் என்னும் மாளிகையில் கூடினர். ஊராள்வோனாகிய நம்பி ஊடத் தூருடையான் என்பவனும் இக்கூட்டத்தில் கலந்து கொண்டான். இவ்வூரில் இருந்த தெய்வங்களின் கோயில்களுக்கு நிலங்களின் வருவாய்கள் அளிக்கப்பெற வியவஸ்தைகள் (ஒழுங்குமுறைகள்) நிறைவேற்றப்பட்டன' என்று கூறுகிறது. இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ள பன்னிரண்டு தெய்வங்களுள் ஜேஷ்டாதேவியும் ஒருத்தியாவாள்.

பாண்டிய நாட்டிலும் ஜேஷ்டாதேவி வழிபாடு பல்கி இருந்தமையைத் திருப்பரங்குன்றம் முதலான இடங்களில் சேட்டையார் திருவுருவம் காணப்படுமாற்றால் அறியலாம். பிற்காலத்தில் இவ்வழிபாடு வழக்கிழந்து அழியலுறத் தொடங்கியமைக்குக் காரணம் யாது எனத் திட்டமாகக் கூற இயலவில்லை.

### வழிபாடு அருகியதேன்?

பண்டைக்காலத்துச் சேட்டையார் வழிபாடு சிறந்திருந்தமையை இச் சான்றுகள் விளக்குவனபோலச் சமயநூல்களும் விதிக்கின்றன. ஆகமநூல்களிலும் போதாயன க்ருக்ய சூத்திரம் முதலான சூத்திர நூல்களிலும் சேட்டைவழிபாடு கூறப்பட்டுள்ளது. தொண்டரடிப் பொடியாழ்வார், 'நாட்டினான் தெய்வம் எங்கும் நல்லதோர் அருள்தன்னாலே காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்குய்யும் வண்ணம் கேட்டிரே நம்பி மீர்காள் கருடவாகனனும் நிற்கச் சேட்டைதன் மடிய கத்துச் செல்வம்பார்த் திருக்கின்றீரே' எனத் தம் திருமாலையில் சேட்டையைப் பற்றிக்குறிக்கின்றார். பலராலும் அறியப்பெற்றதாக இருந்த இவ்வழிபாடு, சிவன் திருமால் என்னும் தெய்வ வழிபாடுகளில் மக்கள் கொண்ட பற்றால்- உறைப்பால், சிறுதெய்வவழிபாடாகி நலிவுறுவதாயிற்று என ஊகித்தறியலாம்.

### முடிவுரை:

'ஜேஷ்டாதேவி' பற்றிய கருத்துக்கள் சங்ககாலம் முதலே இருந்தன. இவள் திருமகளுடன் தோன்றியவள் என்பது முதலான புராண வரலாறுகள் இவளைப் பற்றித் தோன்றிப் பரவின. குளக்கரைகளிலும், தனிக்கோயில்களிலும் இவள் எழுந்தருள்விக்கப் பெற்றாள்; அர்ச்சனை அமுது படையல் முதலியவற்றுடன் வழிபாடுற்றாள். சோழர், பாண்டியர் காலத்தில் நிகழ்ந்த இவ்வழிபாடு பிற்காலத்து அருகியது. கோயிலில் அமைந்த சேட்டையின் சிலைகள் பேணுவாரின்றிக் கிடந்தன; சில அப்புறப் படுத்தப்பட்டதும் உண்டு. நாம் வெளிப்புறத்துக் கிடக்கும் சிலைகளைப் பாதுகாத்தும், கோயிலின்உள்ளே தொழுவாரற்று இருக்கும் ஜேஷ்டாதேவியைத் தொழுதும் பணிசெய்தால், தீமையில் இருந்து நீங்குதல் உறுதி எனலாம். *

# "செத்ததும் சிறியதும்"

திரு நா. வேணுகோபால் நாயகர், B.A., B.L.
செயலாளர்: ஸ்ரீவைஷ்ணவ மகா சங்கம், சென்னை.

தென்பாண்டி நாட்டிலே திருக்கோளூரிலே திருவவதரித்த மதுரகவிகளுக்குத் தக்க ஆசாரியரை அடைந்து, உண்மை ஞானம் பெற வேண்டுமென்ற அவா! பல திவ்விய தேசங்களும் திரிந்து, வடக்கே திரு அயோத்தியை அடைந்தார். இடையில் கண்டு வார்த்தையாடிய எவரையும், தமது ஆசாரியராக ஏற்றுக் கொள்ள இயலவில்லை!

தெற்கிலிருந்து ஒரு ஒளிப் பிழம்பு திடீரென மதுரகவிகளை வந்து தொட்டது! வடக்காகப் பின்னிட்டார் அது முன்னிட்டது! முன்னிட்டார் தெற்கு நோக்கி! அப் பிழம்பும் பின்னிட்டது! அதனால் தெற்கு நோக்கியே நடந்தார். ஒளிப்பிழம்பும் குறைந்து வந்து, திருக்குருகூர்த் திவ்விய தேசத்திலே, ஓங்கி வளர்ந்திருந்த ஒரு புளிய மரப்பொந்தில் அடங்கியது!

அப்புளிய மரப்பொந்தில் ஒரு குழந்தை வசீகரமான தோற்றத்துடன் காட்சியளித்தது. அதனுடைய பேரொளியே அயோத்திவரை நீண்டு வந்து மதுர கவிகளைத் தொட்டது! விசாரித்ததில், குறுநில மன்னரான காரியாருக்கும், உடையநங்கையாருக்கும், திருக்குறுங்குடி எம்பெருமான் திருவருளால் பிறந்த அந்த ஆண்மகவு, கண் திறவாமலும், வாய் பேசாமலும், உண்ணாமலும், இருக்கக் கண்டு, மனம் உடைந்து, அதனைத் திருக்குருகூரில் எழுந்தருளியுள்ள, பொலிந்து நின்ற பிரான் சந்நிதியில் கிடத்தி, உலகின் தன்மைக்கு மாறுபட்டு இருந்தமையால், மாறன் எனப் பெயரிட்டு, விட்டுவிட்டனர். அம் மகவும் அருகிருந்த புளியமரப் பொந்தில் சேர்ந்து, பதினாறு ஆண்டுகளாக வளர்ந்து வருகிறது எனத் தெரிந்தது!

பொந்துக் குழந்தையின் பொலிவு, தொண்டு கிழவரான மதுரகவிகளை மயக்கி விட்டது! ஒருவரையும் ஏறிட்டுப் பாராத அந்தக் குழந்தையின் திருக்கண்கள், தம்மீது பட வேண்டுமெனத் துடித்த மதுரகவிகள், ஒரு கல்லை எடுத்து எதிரில் போட்டார். உள்ளத்தால் உறங்காத அக்குழந்தையும், தன் திருக் கண்களைத் திறந்து, மதுரகவிகளையே நோக்கி மலர விழித்தது!

ஒருவரிடமும் பேசாத அக்குழந்தை தம்மிடம் பேசவேண்டும், தனக்கு உபதேசம் அருளி, தன்னுடைய ஆசாரியனாகி உய்விக்க வேண்டுமென்ற அவாவில், மேம்பட்டார் மதுர கவிகள்! கூடியிருந்த கூட்டமும் கூர்ந்து கவனித்தது! தம்முடைய ஞானத்தை எல்லாம் தகர்த்துக் கொண்டிருந்த ஒரே கேள்விக் கணையை விடுத்தார் மதுரகவிகள்! அக்கேள்விக் கணை:

> செத்ததின் வயிற்றில்
> சிறியது பிறந்தால்!
> எத்தைத் தின்று?
> எங்கே கிடக்கும்?

என்பது மதுரகவிகள் வினா. அதற்கு அதை விடச் சுருக்கமாகவும், அழுத்தமாகவும், திருத்தமாகவும் குழந்தையிடமிருந்து எதிர்க்கணை பதிலாக வந்தது!

> அத்தைத் தின்று'
> அங்கே கிடக்கும்!

மதுரகவிகள் வினா; வைணவ சமயத்தின் சாறு. அதற்குக் குழந்தை அருளிய விடை, அச்சாற்றைத் தெளிவாக்கிக் காய்ச்சி எடுத்த கற்கண்டு! வைணவ சமயத்தின் தலையாய கொள்கை தத்துவத் திரயம். அதாவது இப் பிரபஞ்சம் மூன்று பிரிவுகளால் ஆனது என்பது. இவையே உயர்ந்தவை, நிலையானவை, நிகரற்றவை! இம் மூன்றின் இயக்கமே பிரபஞ்சம்.

முதலாவது: உயிரற்ற பொருள்களான பஞ்சபூதங்கள், மற்றும் இவற்றின் சேர்க்கையால் ஏற்பட்ட பொருள்கள். இவையே அசித்து எனப்படும். கல்லாகவும் மண்ணாகவும் தானே நடையாடாப் பொருள்களாகக் காணப்படுபவை.

இரண்டாவது: சித்து என்னும் உயிர்த் திரள். சீவாத்துமா என்றுங் கூறலாம்.

மூன்றாவது: கடவுள் அல்லது ஈசுவரன். சித்து, அசித்து, ஈசுவர சொரூபமே பிரபஞ்சம்.

சகல நூல்களையும் கற்று, சகலரையும் கேள்விகேட்டுத் திருப்தி பெறாத மதுரகவிகள் ஏவிய கேள்விக் கணையின் பொருள்யாது?

செத்தது என்பது உயிரற்றது, அசித்து. இவை பஞ்சபூதங்கள், மற்றும் அவற்றின் சேர்க்கையால் ஏற்பட்டவை. நம் உடம்பு பஞ்சபூதத்தின் சாமர்த்தியமான ஆச்சரியப்படத்தக்க சேர்க்கையே! இப் பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் ஏற்பட்ட உடம்பிலே! அதாவது:

செத்ததின் வயிற்றில்

சிறியது என்பது அணுவளவாக உள்ள சீவாத்துமா. பஞ்ச பூதச் சேர்க்கையாலான அசித்து சம்பந்தமான உடம்பிலே, சிறியதான சீவாத்துமாவும் சேர்ந்து கொண்டு, மண் உலகில் பிறவியை ஆரம்பித்துவிட்டால்; அதாவது

செத்ததின் வயிற்றில்
சிறியது பிறந்தால்!

பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலான, அசித்தான உடம்பின் அடிப்படையில் சீவாத்துமாவும் கலந்து தேக யாத்திரையைத் தொடங்கினால், அத்தகைய சீவாத்துமா,

எத்தைத் தின்று?

எதைத் தனக்கு உணவாகக் கொண்டு, அதாவது தொடர்ந்த சாதனமாகக் கொண்டு,

எங்கே கிடக்கும்?

எதைத் தன் குறிக்கோள்எனக் கொண்டு இருக்கும்? என்று, மறைபொருளாகக் கேட்டார் மதுரகவிகள்!

அதாவது உடம்போடு கூடிய உயிர் தன்னை இயக்கிக் கொள்ள எதை உணவாகக் கொள்ளும்? அவ்விதமான உணவைக் கொண்டு எதை நிலை எனக்கொண்டு வாழும்? என்று மதுரகவிகள் வினாவினார். அந்த ஞானக் குழவியிடமிருந்து பளிச்சென்று வந்தது பதிலும்!

பஞ்சபூதங்களால் அமைந்த அசேதனமாகிய அசித்தின் சேர்க்கையால் ஏற்பட்ட உடலினுக்குள், பொதிந்துள்ள உயிர்த் தத்துவம் பிறவியை ஏற்றுக்கொண்டால்,

அத்தைத் தின்று

அந்த உடலிலே ஏற்படும் சுகதுக்கங்களை உணவாகக் கொண்டு;

அங்கே கிடக்கும்!

அப்படியான சுகதுக்கங்களுக்குக் காரணமான உடலிலேயே உழன்று கொண்டிருக்கும்; சுக துக்கங்களுக்கு ஏதுவான உடலையே தஞ்சம் எனக்கொண்டு, உயிரானது பற்றிக் கொண்டிருக்கும்.

மதுர கவிகள் இப்பதிலால் உலகின் இயல்பை அறிந்து கொண்டார். அது மாத்திரம் அல்ல அவரது கேள்வி! இப்படிப் பஞ்சபூதங்களால் ஆன உடம்பில் உயிர்த் தத்துவம் கூடிப் பிறந்துள்ள நீர் எதை உணவாகப் பற்றிக் கொண்டுள்ளீர்! மற்ற உயிர்களைப் போல நீவிரும் ஏன் உடம்பின் காரணமான சுக,துக்கங்களில் உழலவில்லை. ஏன் இவைகளுக்குக் காரணமான உடலையே தஞ்சம் எனப் பற்றிக் கொண்டிருக்கவில்லை. உலக வழக்கிற்கு மாறாக உண்ணாமலும் உரையாடாமலும், இந்தப் புளிய மரப் பொந்திலே கிடப்பது என்ன விந்தை! என்று அக்குழந்தையை மடக்கி விட்டார் மதுரகவிகள்!

சிறுமாமனிசர் (வடிவால் சிறியராய், ஞானத்தால் பெரியவராக விளங்கும் சிறப்புடையவர் ஆகிய நம்மாழ்வார்), இதற்குப் பதில் தருகிறார்! உலகில் பிறக்கும் உயிரினங்களின் தன்மை: அதாவது செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால்; அந்த உடலினால் ஏற்படும் சுகதுக்கங்களையே உணவாகக் கொண்டு, உடம்பையே பெரிதென எண்ணி வாழ்ந்து கொண்டிருக்கும்!

ஆனால் எனது நிலைவேறு! எனதுஉடம்பு எனது உயிரைக் கட்டுப்படுத்தாது. எனது உயிர் எனது உடம்பின் வசமல்ல. செத்ததின் வயிற்றில் அதாவது அசித்துச் சம்பந்தமான உடலுடன், சிறியதான சீவாத்துமா பிறந்தால்; அதாவது எனக்குப் பிறவி ஏற்பட்டாலும்; செத்ததுடன் சேராது இச்சிறியது. ஆகையால் செத்ததின் சம்பந்தத்தால் ஏற்படும் சுக துக்கங்களை உணவாகக் கொள்ளாது. இவைகளின் காரணமாக இந்த உடலையே தஞ்சம் எனவும்கொள்ளாது.

உலக இயற்கைக்கு மாறாக வளரும் இக்குழந்தையின் பெற்றோர்களின் வாக்குப்படி இது மாறனல்லவா!

தாயின் கர்ப்பப் பையிலிருந்து வெளிவரும் சிசு முதலில் நுகர்வது, தன் மூக்கினால் உலகக் காற்றையே! இக் காற்றுக்குச் சடம் எனப் பெயர். இக் காற்று சிசுவின் உடலில் புகுந்ததும், உலகின் அஞ்ஞானத்திற்கும், உடலால் ஏற்படும் சுகதுக்கங்களுக்கும் அடிமையாகிறது! இப்படித் தனக்கு நேராமல் தடுத்துக் கொண்டாராம் மாறன்! அதாவது, தமது மூக்கின் வழியாக நுழைய இருந்த சடம் என்னும் காற்றினை 'ஊம்' என்று அதட்டி, உள் நுழையாத படிக் கோபித்தாராம்! எனவே, இவர் சடகோபர் எனப் புகழ்பெற்றார். இவரும் தமது பிரபந்தங்கள் முழுவதிலும் தம்மைச் சடகோபன் என்றே அழைத்துக் கொள்ளுகிறார்.

''செத்ததின் வயிற்றில் பிறந்த இச் சிறியது, பின் எத்தைத்தான் தின்று எங்கேதான் கிடக்கும்'' என்று கேட்கின்றீரா? விடையருளுகிறார் சடகோபர்!

உலக வழக்கிலிருந்து மாறுபட்டும், சடம் என்னும் காற்றையே உடலில் புகவொட்டாமல் கோபித்தும், சடகோபனாக உள்ள எனது ஆத்மா தின்ன வேண்டியது என்ன? கிடக்க வேண்டியது எங்கே?

அத்தைத் தின்று, அங்கே கிடக்கும்!

எழுத்துக்களில் அகரம் திருமாலைக் குறிக்கும். ஓம் என்பது அ உ ம என்னும் மூன்று எழுத்துக்களின் சேர்க்கையே. இதில் 'அ' திருமாலையும், 'உ' திருமகளையும், 'ம' உயிர் அல்லது சீவாத்துமாவையும் குறிக்கும். மகார வாச்சியனான சீவாத்துமா, உகார வாச்சிய

ளான திருமகளின் துணை கொண்டு, அகார வாச்சியனான திருமாலை அடைதல் வேண்டும் என்பது, பிரணவமான 'ஓம்' தரும் உபதேசம்.

எனவே, மகார வாச்சியனான, சிறிய நான் எனது சீவாத்துமா, அத்தைத் தின்று- அகாரவாச்சியனான திருமாலின் கலியாண குணங்களையே உணவாகக் கொண்டு, அங்கே கிடக்கும் - அவன் திருவடிகளையே தஞ்சம் எனக் கொண்டு, அவன் சந்நிதியில் உள்ள புளிய மரப் பொந்திலே கிடக்கின்றது! இவ்வாறு உலகத்துச் சித்து அல்லது ஆத்மாக்களின் நிலையினையும், இதற்குமாறான தமது ஆத்மாவின் நிலையினையும் உணர்த்தியருளினார் சடகோபர்!

மதுரகவிகளின் கேள்வியிலே தன்னலமும் கலந்திருந்தது! செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் என்ற நிலையில், பிறவி எடுத்து விட்ட தனக்கு வேண்டிய உபதேசத்தை அருளும்படி உள்ளுறை பொருளாக வேண்டினார் மதுரகவிகள்! செத்ததின் வயிற்றில் பிறந்து விட்ட சிறியதான மதுரகவிகள், எத்தைத் தின்று எங்கே கிடக்கவேண்டும் என்பதைப் பணிவுடனும், பத்தியுடனும் விளக்கியருள வேண்டினார் மாறனாம் சடகோபரை!

அம் மிகுஞானச் சிறு குழவியின் விடையிலே, இம் மூன்றாவதான விளக்கமும் அமைந்திருப்பது தெற்றென விளங்குகிறதே! பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலான உடம்பில் பிறந்துள்ள சிறியதான சீவாத்துமாவான நீரும், அகாரவாச்சியனான திருமாலின் கலியாண குணங்களையே உணவாகக் கொண்டு, அவன் திருவடிகளையே சரணாகப் பற்றிக் கொண்டிருத்தலையே நிலையாகக் கொள்ளவேணும் என்று உபதேசித்தருளினார், ஆசாரியரான குருகூர்ச் சடகோபர்!

மதுர கவிகளும் 'தேவுமற்றறியேன்' என நம்மாழ்வாரின் திருவடிகளில் சாய்ந்தார்!

நம்மாழ்வார் இந்த உபதேசத்தையே ஆயிரம் பாடல்களாகத் திருவாய் மொழியில் உலகம் அறிய வெளியிட்டருளவும், அதனை மதுரகவிகளும் பட்டோலை கொண்டார். திருவாய்மொழி ஆயிரமும் துவய மந்திரத்தின் பொருளாகும். துவயம் என்றால் இரண்டு என்று பொருள். இந்த மந்திரத்தையே, ஈசுவரனான திருமால் தனது உயரிய சொத்தாக மதிக்கிறான். வைணவ ஆசாரியர்களும் இந்த துவய மந்திரத்தையே, சீடனை ஆட்கொள்ள ஆபத்தில் தமக்கு உதவும் நிதியாக மதிக்கின்றனர்!

துவய மந்திரம் இரண்டு வாக்கியங்களால் அமைந்துள்ளது.

ஸ்ரீமந் நாராயண சரணம் சரணம் பிரபத்யே,
ஸ்ரீமதே நாராயணாய நம:

இவ்விரண்டு வாக்கியங்களும், பத்துப் பிரிவுகளாக அமைந்துள்ளன.

| | |
|---|---|
| 1. ஸ்ரீமத் | திருமகளுக்கு நாயகனாய் இருக்கும் தன்மை. |
| 2. நாராயண | சகல சித்து அசித்துக்களையும் உடலாகக் கொண்டு அவற்றை இயக்கும் தன்மை |
| 3. சரணௌ | நாராயணனுடைய சர்வலோக சரண்யமான சரணாரவிந்த யுகளம் |
| 4. சரணம் | அத் திருவடியிணை பிராபகமாயிருக்கும் தன்மை. |
| 5. ப்ரபத்யே | சேதனனுடைய பிரார்த்தனையை உள்ளடக்கிக் கொண்டுள்ள விசுவாசம். |
| 6. ஸ்ரீ | திருமகள், திருமகள் நாயகன் இவர்களுடைய நித்திய சம்பந்தம். |
| 7. மதே | கைங்கர்யம் கொள்ளும் ஈசுவரன் பரமபோக்கியமாயிருக்கும் தன்மை. |
| 8. நாராயண | எல்லார்க்கும் சுவாமியாயிருத்தல். |
| 9. ஆய | நித்திய கைங்கர்யம் |
| 10. நம | கைங்கரியத்திற்குத் தடையாயிருப்பவைகளைப் போக்குதல். |

இப்பத்து அர்த்தங்களையும் திருவாய்மொழியின் பத்துப் பத்தாலும் சாதித்தருளியுள்ளார் நம்மாழ்வார். இதனால் மதுரகவிகளுக்கு அருளிய விடையே, திருவாய்மொழியின் வித்தாக அமைந்துள்ளது எனக் கொள்ளலாம்!

இம் மகத்தான கேள்வியும் அதற்கு விடையாக எழுந்த உபதேச அமுதமும் வாழ்க! வாழ்க சடகோபர்! வாழ்க மதுரகவிகள்! வாழ்க திருவாய்மொழி! வாழ்க உலகு!'' என்று போற்றும் பாடலையே வைணவர் நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தின் முடிவுப் பாடலாக அமைத்துள்ளனர்!

அடியார்கள் வாழ, அரங்கநகர் வாழ,
சடகோபன் தண்தமிழ்நூல் வாழ,—கடல்சூழ்ந்த
மண்ணுலகம் வாழ, மணவாள மாமுனியே,
இன்னும்ஒரு நூற்றாண் டிரும்

# திருமந்திரத்தின் பெருமை

திரு. புலவர். ஏ. பரந்தாமன், பி.லிட்., தாம்பரம்.

திருமந்திரமாவது, மூன்று பதமாய் எட்டெழுத்தாய் அமைந்த ''ஓம் நமோ நாராயணாய'' என்பதாகும். இம் மந்திரத்திலுள்ள ஓம் எனும் பதம், ஈரெழுத்தாயிற்றே. அப்போது ''ஓம் நமோ நாராயணாய'' எனும் மந்திரம் ஒன்பது எழுத்துக்களாகின்றனவே என்பாருமுளர். ஓம் எனும் சொல், ஓரெழுத்தொரு மொழியாகும். அகார, உகார, மகாரமெனும் மூன்று ஒலிகளின் கூட்டமைப்பே ''ஓம்'' ஆகும். இதனையே ஆழ்வாரும் ''மூலமாகிய ஒற்றை எழுத்தை மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி'' என்றார். எனவே ஓம் எனும் சொல்லை ஓரெழுத்தாகக் கொள்ள ''ஓம் நமோ நாராயணாய'' எனும் மந்திரம் எட்டெழுத்துக்களாகும் என்பது விளங்குகின்றது. இதனையே முமுட்சுப்படியும் ''எட்டிழையாய் மூன்று சரடாய் மக்கள் பயன்படுத்தும் மாங்கல்யச் சரடுபோல'' என்று திருமந்திர நிலை பற்றிக் கூறுகின்றது. திருமந்திரமென்பது ''தன்னைச் செபிக்கின்றவர்கட்கு இரட்சகமாயிருத்தலின் ,மந்திரம் எனப் பெயர் பெற்றது'' என்று முமுட்சுப்படி கூறுகின்றது.

## திருமந்திரத்தின் பொருள்

1. 'ஓம் நமோ நாராயணாய' என்னும் திருமந்திரத்தின் முதலிலுள்ள ஒற்றை எழுத்தாலான ஓம் என்ற சொல்லின் உட்பிரிவுகளாகிய அகாரம், அனைத்துப் பொருள்களுக்கும் காரணமாகிய எம்பெருமானையும், உகாரம் பெரிய பிராட்டியையும், மகாரம் ஆன்மாவாகிய சேதனனையும் குறிக்கின்றது.

2. அடுத்துள்ள 'நம' என்னும் பதம், எனக்கு யான் உரியவன் அல்லன், யான் ஈசுவரனுக்கே உரியவன் என்பதைக் குறிக்கும்.

3. அடுத்துள்ள 'நாராயணாய 'என்னும் பதம், ஈசுவரனாகிய எம்பெருமான், தன்னை ஒழிந்த நாரம் ஆகிய எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாய் இருப்பதோடு, அப்பொருள்கள் ஒவ்வொன்றிலும் எள்ளுக்குள் எண்ணெய் போல் நீக்கமற நிறைந்துள்ளான் என்பதனைக் குறிக்கின்றது. இதனையே ஆழ்வாரும் ''ஆமையாய்க் கங்கையாய் ஆழ்கடலாய் அவனியாய் அருவரைகளாய், நான்முகனாய், நான்மறையாய், வேள்வியாய் தக்கணையாய்த் தானுமானான்'' என்று குறிப்பிடுகின்றார். ''முற்ற உலகெல்லாம் நீயேயாகி மூன்றெழுத்தாய முதல்வனே'' என்றும், ''மண்ணொடு நீரும் எரியும் காலும் மற்றும் ஆகாசமும் ஆகி நின்றாய்'' என்றும், ஆழ்வார்கள் குறித்திருத்தல் காணலாம். மற்றும் சேதனன் எம்பெருமானுக்கு எல்லாவிதத் தொண்டுகளையும் புரிவதற்கு விரும்பியிருத்தல் வேண்டும் என்பதனையும், இஃது உணர்த்துகின்றது.

திருமந்திரத்தினால் ஏற்படும் ஞானம், முன்னோர்கள் நமக்கு எனத் திரட்டி வைத்த பெரும் செல்வம் போன்றதாகும். எங்ஙனம் நாராயணனைக் காட்டிலும் மேலான தெய்வம் வேறு ஒன்றில்லையோ, அங்ஙனமே இந்த ஓம் நமோ நாராயணாய என்னும் திருமந்திரத்தைக் காட்டிலும், மேலான வேறு மந்திரம் இல்லை. இதுபற்றியே திருமங்கையாழ்வார் ''நாவினால் உய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணாய என்னும் நாமம்'' என்று இதனைப் புகழ்ந்து போற்றியுள்ளார். எம்பெருமானுடைய மேன்மையைக் காட்டிலும், அவனைக் குறிக்கும் திருநாமமாகிய நாராயண மந்திரத்தின் மேன்மை உயர்ந்ததாகும். ஆன்ம அறிவு, உய்விற்கு அறியவேண்டிய இன்றியமையாத பொருள்களெல்லாம், இத் திருமந்திரத்திற்குள்ளே உண்டு. இதனைச் சேதனன் மன மாசு அற்றவனாய், மனத்தை ஒருமைப்படுத்தி, வேறுஎவ்விடத்திலும் செலுத்தாமல், இதனிடத்திலேயே முழுமனத்தையும் இருத்தி, தகுதியற்றவர் காதில் விழாதபடி, மிகுந்த அன்புடன் பாராட்டி அனுசந்தித்தல் வேண்டும்.

## திருநாமச் சிறப்பு

பொதுவாக, பெரும்பாலான மக்கள்இறைவனை எப்போதும் நினைத்து வணங்குவதும், அவரது திருநாமங்களை அன்புடன் ஓதி வழிபடுவதும், இல்லை. உலக மக்களின் இவ்வியல்பினை நினைந்தே, திருமங்கையாழ்வார் ''துஞ்சும்போது அழைமின், துயர்வரில் நினைமின், துயரிலீர் சொல்லினும் நன்றாம்'' என்றார். தமக்குத் துயர் வந்தபோது, மக்கள் இறைவனது திருநாமங்களை ஓதி வணங்கித் துயர்களைய வேண்டுவர். இறைவனும் அவர்களது வேண்டுதலுக்கு இணங்கி, அவர்களின் துயர் களைந்து அருள்புரிவார். இதனையே குலசேகராழ்வாரும் ''துன்பமிகு துயரகல அயர்வு ஒன்றில்லா அகம்வளர, அகம் மகிழும் தொண்டர் வாழ, அன்போடு தென்திசை நோக்கிப்பள்ளிகொள்ளும் அணியரங்கன்'' என்றார். ஆனால் ஒருசிலரே, இறைவன் தமது துயரினைக் களையாவிட்டாலும், அவனது திருப்பாதங்களை வணங்குவதிலிருந்து நீங்கார். இதனைத் ''தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை'' என்கின்றார் ஆழ்வார். இதனால் நாம் எம்பெருமானை இரவும் பகலும், துயரம் வந்தபோதும், துயரம் இல்லாதபோதும், இரவு உறங்குவதற்கு முன்னும்,

வைகறையில் துயில் எழும்போதும் நினைத்து, இறைவனது திருநாமத்தை இடையறாது ஓதி வழிபட்டுவருதல் வேண்டும் என்பது புலப்படு கின்றது.

## திரௌபதி

ஏனெனில், எம்பெருமான் நம் கட்புல னுக்கு வெகுதூரத்தில் இருப்பினும், அவரது நாராயண மந்திரம், தன்னைப் பக்தியுடன் ஓது கின்றவர்களுக்கு அருகில் இருந்து, அவர்களது விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றி, முற் றுப்பெறச் செய்யும். திரௌபதியானவள் தனக்கு மானபங்கம் ஏற்பட்ட காலத்தில், தன் இருகைகளையும் கூப்பிக் கோவிந்த நாமம் சொல்லி அபயம் வேண்டினாள். வைகுந்தத் திலிருந்த திருநாராயணன் அந்த அபயக் குர லைக் கேட்டு, தனது அருளால் அவளது ஆடை சுரக்கச் செய்து, அவளது மானத்தை அழிய விடாமல் காத்தருளினார். இதனால் இறைவ னின் திருநாமம் ஆகிய நாராயண மந்திரத்தின் வல்லமையையும், பெருமையையும் நம்மால் அளவிட்டுக் கூறுதல் இயலுமோ?

## அஜாமிளன்

நாராயண மந்திரம், சொல்லவேண்டும் என்ற எண்ணமில்லாமலே சொல்லப்பட்டா லும், ஏளனமாகவோ இழிவாகவோ பொருள் உணர்ச்சி இன்றியோ கூறப்பெற்றாலும், தன் னைக் கூறினாரை வாழ்விக்கும். இஃது இம் மந்திரத்தின் சிறப்பியல்பாகும். அஜாமிளன் என்னும் கொடியவன், தன் இறுதிக் காலத்தில் தன் பிள்ளையாகிய நாராயணனை, நாரா யணா, என்று பொருள் உணர்ச்சியின்றியே பொதுவாகப் பெயரிட்டு அழைத்தான். எனி னும், எவ்வகையாலோ நாராயணன் என்ற திருப்பெயரை வாய்விட்டுக் கூற நேர்ந்த புண் ணியத்தால், எம்பெருமானின் தூதுவர் அவன் பால் போந்து, அவனது ஆன்மாவை விமானத் தில் வைத்து ஏற்றிக்கொண்டு வைகுந்தம் சென் றனர். சிசுபாலன் போன்றவர்கள் கண்ண பிரானைப் பரிகாசமாகவும், ஏளனமாகவும் அடிக்கடி இகழ்ந்து பேசியபோதிலும், தன் நாமத்தைச் சொன்ன காரணத்திற்காகக் கண்ண பிரான் அவர்களுக்கு நற்கதி அருளினார்.

## முற்கலன்

முன்னொரு காலத்தில் முற்கலன் என்னும் கொடியவன் ஒருவன் இருந்தான். அவன் பல வித தீய காரியங்களில் ஈடுபட்டுப் பல கொடு மைகள் செய்து வந்தான். ஒருநாள் அவனது நண்பன் நாராயணனை, நாராயணா என்ற ழைத்தான். அவன் இறுதிக்காலத்தில் எம பதியை அடைந்தான். இவன் வருவதைக் கண்ட எமன், தன் இருக்கையினின்றும் எழுந்து வந்து வரவேற்றான். இதைக்கண்ட முற்கலன் வியப்பெய்தி எமனை நோக்கி யான், பல கொடுமைகள் செய்தவன். யான் தண்டனைக்கு உரியவன். என்னைத் தாங்கள் வரவேற்பதா? எனக் கேட்டான். எமன் முற்கலனை நோக்கி நீ ஒருமுறை உனது நண்பனை அவனது பெய ராகிய நாராயணா என்கிற பெயரிட்டு அழைத் தாய். அதனால் நீ எய்திய புண்ணியத்தின் காரணமாக, யான் உன்னை எதிர்கொண்டு அழைத்தேன் என்றான். இந்த உரையாடல் நாராயணனைப் பற்றி நடந்ததால், அந்த நேரம் எமலோகமே சுவர்க்கலோகமாயிற்று என்று வரலாறு கூறுகின்றது. இதனை ''நம னும் முற்கலனும் பேச, நரகில் நின்றார்கள் கேட்க, நரகமே சுவர்க்கமாகும் நாமங்கள் உடைய நம்பி'' என்று திருமாலையில் தொண் டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்திருத்த லால் அறியலாம்.

## திருமங்கையாழ்வார்

'ஓம் நமோ நாராயணாய' என்னும் இத் திருமந்திரம், அவரவர் விரும்பியதனை அவ ரவர்க்கு அவரவர்களின் பாவ புண்ணிய நிலை களுக்கு ஏற்றவாறு, இனிதுகொடுக்கும். ''குலந் தரும், செல்வந் தந்திடும், அடியார் படுதுய ராயின எல்லாம் நிலந்தரம் செய்யும், நீள் விசும்பு அருளும், அருளொடு பெருநிலம் அளிக் கும்; வலந்தரும், மற்றுந் தந்திடும், பெற்ற தாயினும் ஆயினசெய்யும்; நலந்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன். நாராயணாய என் னும் நாமம்'' என்று திருமங்கையாழ்வார் தெளிவுறக் கூறியருள்கின்றார்.

இதன்பொருள்; சேஷத்துவ ஞானமாகிய குலத்தையும், அக்குலத்துக்கு ஏற்ற கைங்கரி யம் ஆகிய பெரும் செல்வத்தையும், நாராயண மந்திரம் கொடுக்கும்; தொண்டர்களின் துய ரங்களைத் தரைமட்டமாக்கும்; கைங்கரிய மாகிய தொண்டுகளுக்கு இடையூறு இல்லாமல் அவைகளை மேன்மேலும் வளர்ந்தோங்கச் செய்யும்; மிகஉயர்ந்த பேரின்பமாகிய பரம பதத்தையும் அளிக்கும்; தன்னை அனுபவித்த லால் ஏற்படும் பேரானந்தத்தில் நம்மை மூழ்கச் செய்யும்; ஒருவன் தான் செய்யும் கைங்கரியத் திற்குத் தானே கர்த்தா என்றும், தானே அதை அனுபவிப்பவன் என்றும் நினைக்காமல் அதற்கெல்லாம் இறைவனே முதல்வன் என்று நினைக்கும் வலிமையைக் கொடுக்கும்; பக்தர் களுடைய நிலைக்குத் தக்கவாறு மற்ற நன் மைகளையும் கொடுக்கும். பெற்ற தாயைக் காட்டிலும் மேலான நிலையில் பலவகை நன் மைகளைப் புரியும்! மற்றும் ''செல்கதிக்கு உய்யுமாறு எண்ணி நற்றுணையாகப் பற்றி னேன், அடியேன், நாராயணாய என்னும் நாமம்'' என்ற பாசுரத்திற்கு இணங்க, உயிர் உடலைவிட்டு நீங்கும்போது நற்கதியாகிய திருநாட்டினை நாம் அடைவதற்குச் சிறந்த துணையாக நின்று பயனளிக்கும்.

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்றால் எம்பெருமான் ஆகிய நாராயணனது பெருமையும், அவனது திருநாமமாகிய எட்டெழுத்து மந்திரத்தின் பெருமையும் நன்கு விளங்கும். இத்திருமந்தி ரத்தை நாம் தினந்தோறும் பேரன்புடனும், பெரும் பக்தியுடனும் ஓதி, எம்பெருமானின் அருள்பெற்று உய்வோமாக!

**

# அருணகிரிநாதரும், சமய தத்துவமும்

[திரு. நல். முருகேச முதலியார், B.A., சென்னை]

அருவமொரு நான்காகி உருவமொரு
நான்காகி அவை யிரண்டும்
மருவியுள உருவருவம் ஒன்றாகி
முத்திறமும் வழுத்த வொண்ணாப்
பெருவெளிக்கும் அப்பாலாய் உள்ளபொருள்
ஈதெனவே பெரிதும் சேயோன்
ஒருவனையே புகழ்ந்தஅருள் அருணகிரி
சேவடிப்போ துளத்துள் வைப்பாம்

—பாம்பன்சுவாமிகள்

**முன்னுரை:**

அருணகிரிநாதர் அநுபூதிமான். அவர் சமயக் கணக்காயர் அல்லர். சித்தி நிலையில் சமய பேதங்கள் காணப்படா. அதற்கு முன் நிலையில் ஏதோ ஒரு சமயத்தைப் பின்பற்றி யிருத்தல் முரணாகாது. இறைவன் உணர்த்தத் தெளிந்து, அந்நிலையில் நின்று அதை உலகம் உய்யக் கூறுவது அருளாளர்கள் வழக்கு. அத்தகைய நிறைமொழிப் பெரியோர்களின் திருவாக்கு, மறைமொழியாக எண்ணப்படும். வேதங்கள் ஒரு குறிப்பிட்ட சமயத்தை நிர்ணயிக்கவில்லை. உபநிடதங்கள் ஒரு குறிப்பிட்ட சித்தாந்தத்தைப் புகட்டவில்லை. ஆகமங்கள் சமுத்திரகலச நியாயமாகக் கிரியா பாகத்தில் சைவம், வைணவம் சாக்தம் என்று வகைப்படுத்தின. ஆகமாந்தம், வேதோபநிடதங்களின் சிரசில் பிரகாசிக்கிறது. திருமூலர் அவரது திருமந்திரத்தில் அருளியது ஆகமாந்தமே. கிரியை, உபாசனை, ஞானம் என்று மார்க்கங்கள் மூன்று. இவைகளில் ஞானமே சிறந்தது.

அருணகிரிநாதரின் அருளிப்பாடுகளில், சர்வமத தர்சனமும், தூலாருந்ததி நியாயமாக ஓரளவு காணப்படும். அவருக்குத் தெரியாத கலை ஒன்றும் இல்லை. அவர் வாழ்க்கையின் முற்பகுதி, பலவாறு குளறுபடி செய்து எழுதப்பட்டுள்ளது. அது எவ்வாறாயினும், அது 'சகலர்' நிலையென்று கூறலாம். ஆனால் அவர் பக்குவ நிலையில், முருகப்பிரான் அவர்க்கு முன்னிலையாகத் தோன்றி உபதேசம் அருளியாட்கொண்டதால், அவரை 'விஞ்ஞானகலர்' என்று எண்ணத்தகும். அருணகிரியாரது அருளிப் பாடுகளில், பல தெய்வங்கள் பேசப்பட்டிருப்பினும், அவர் ஆறுமுகச் சிவனையே பரம்பொருளாகவும், அப்பொருளின் சொரூப தடத்த நிலைகளை உணரத்தக்கதாகவும், நாம் காண்பது உண்மையாகும். ஷண்மதங்களின் இயல்புகளை அவர் உணர்ந்திருப்பினும், அவர் 'கௌமாரம்' என்ற ஒரு சம்பிரதாயத்தைத் தனியாக நிலைநாட்டினார் என்பது உண்மையாகாது. பிரமப்பொருள் சுப்பிரமணியம் என்றே உணர்ந்து, அஃது ஒன்றையே சிறப்பாகப் புகழ்ந்து வழிபட்டார். தத்துவ வாதிகள் பிரமத்தைச் சகுணம் என்றும், நிர்க்குணம் என்றும் பாகுபடுத்தி வாதாடுவர். அவ்வாறே ஜீவான்மா வேறு, பரமான்மா வேறு, உலகம் ஈசுவரனின் பரிணாமம்-அல்லது மித்தை என்று வாதாடுவர். இதன் விளைவாக அத்துவிதம் என்பது ஒன்றா, பலவா, வேறா, ஒன்றிரண்டல்லாததா, ஒருபொருளா என்று வாதாடி மயங்குவர். இத்தகைய பிரச்சினைகட்கு அருணகிரியார் ஆங்காங்கு விளக்கம் கூறி, வீண் வாதங்களையும் பேதங்களையும் அடக்குவர். சுருங்கச்சொல்லின் அருணகிரியாரின் மதம் 'ஆகமாந்தம்'. அவர் சிறப்பிக்கும் மார்க்கம் 'பத்தி' மார்க்கம் எனலாம். இஃது உபசாரமே. இனி அவர் விளக்கிய சில இன்றியமையாத சமயக் கோட்பாடுகளைப் பற்றி ஆராய்வோம்.

## 1. முப்பொருள் நிச்சயம்

எந்த ஒரு சமயமும் பதார்த்த நிச்சயம் செய்வது முதல் கடனாகும். பிரமப் பொருளைத் தவிர்த்து, வேறு ஒன்றும் இல்லை என்பர் ஒருசாரார். வேறு சிலர் ஆன்மா வேறு, அவை பல, இறைவன் அந்தர்யாமியாக ஆன்மாக்களில் உள்ளான் என்பர். உலகம் மித்தை என்பர் சிலர். வேறுசிலர், உலகம் உண்மை அது பகவானின் பரிணாமம், பிராகாரம், மாயையின் விருத்தி என்று பலவாறாகக் கூறுவர். அருணகிரியார் பதி பசு பாச முப்பொருள் உண்மையை ஒப்புக் கொள்பவர் என்பது தேற்றம்.

''ஏழை நானுன் பதிபசு பாச
உபதேசம் பெறவேணும்'' (திரு.56)

''தமியேனும் கதிபெற ஈறாதன
பதிபசு பாசமானதைக்

கசடற வேறு வேறு
செய்தருள்வாயே'' (திரு.92)

## 2. பொருளிலக்கணம்

பொருள் நிச்சயத்துக்குப் பிரமாணம் தேவை. பிரத்தியட்சம், அனுமானம், சப்தம் எனச் சம்பிரதாயமாகக் கூறப்படும் பிரமாணங்கள் மூன்று. இவைகளுக்கு மேலாயது ''சித்து'' என்னும் அறிவை அறியும் அறிவேயாகும். அது

இறைவனால் உள்நின்று உணர்த்தப்படுவது. அது காண்டல் கருதல் உரை போலல்லாமல், மலசம்பந்தம் ஒரு சிறிதும் இல்லாதது.

வானோ புனல்பார் கனல் மாருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனைஆண்ட இடம்
தானோ பொருள் ஆவது சண்முகனே

(ஈண்டு 'இடம்' என்பது 'நிலை'. இதை ஷட்தலங்களாக இலிங்காயத மதம் பாகுபடுத்திப் பேசும்.)

''கலைகொடு சுட்டாத் தீர்பொருள்'' (1152)

''அறியாத அறிவும் அறியாமையுங், கடந்த
அறிவு திருமேனி என்று உணர்ந்து, உன்அருண
சரணாரவிந்தம் அடைவேனோ?'' (திரு.1019)

''கலைகொடு அறியாததை, விழி புனல் வர மொழிகுழறா அன்புருகி உனது அருள் பரவல் கைவரில், விரகொழியில், உலகியல் வினைவிடில், உரை, செயல், உணர்வு கெடில் உயிர் புணர் இருவினை அற்றது போக உதறில் எனது எனும் மலம் மறையவருவதொர் உதய மரணமில் பொருள்'' (திரு.511) என்பது திருப்புகழ். அறிவை அறிவதே பொருள். அதனால் வரும் இன்பமே இறைவன் அருள் என்று அருணகிரிநாதர் மீண்டும் மீண்டும் அருள்வார்.

## 3. இறைவனின் பொதுவியல்பு, சிறப்பியல்புகள்

இறைவன் எண்வகை வடிவினனாய், அறுவகை இயல்பினனாய் இருப்பது, அவனது தடத்த இலக்கணம். அவன் அருட்டிருமேனி கொள்வது அடியார்கள் உய்ய என்று, அருணகிரியார் திட்பநுட்பமாகக் கூறுவர். ''மங்குலின்புறு வானாய், காலாய், தீயாய், நீராய், பாராய், நீயாய், நானாய், மலரோனாய், சங்கரர் தாமாய் ஒன்றினுங் கடைதோயாப் பெருமாளே'' (திரு. 10). ''அகரமுமாகி அதிபனுமாகி அயன்எனவாகி அரியென வாகி, அரனெனவாகி, அவர் மேலாய், இகரமுமாகி எவைகளுமாகி இனிமையுமாகி வருவானே'' (திரு.3.)

## 4. பசு இலக்கணம்

மும்மலம் - ஆன்மா சித்துப் பொருள். ஆனால் அது மல சம்பந்தமானது. இறைவன் அருளால் அம் மும்மலங்களும் போக்கவல்லது. ''கருமமலங்கள் போய் உபதேச குருபர சம்பிரதாயமொடு ஏயும் நெறியது பெறுவோனே'' (திரு.316). யான், எனது என்பவற்றை அடக்குதல் சாதகனுடைய முதல் முதல் முயற்சியாகவேணும். இது இல்லையேல் இருவினையொப்பு மலபரிபாகம் கைவராது. இறைவனது சத்திநிபாதம் என்னும் திருவருட் பதிவால் பிராரத்தம் வலிகெடும். ''நானார் ஒடுங்க நானார் மகிழ்ந்து உனையோத நானார் இணங்க நானார் உணங்க நானார் நடந்து விழ, நானார் தானே புணர்ந்து, தானேஅறிந்து, தானே மகிழ்ந்து, அருளூறித் தானே இருந்த பெருமாளே'' (திரு. 271).

## 5. பாச இலக்கணம்

மாயையின் சம்பந்தமான தத்துவ தாத்துவிகங்களைச் சுவாமிகள் பல இடங்களில் விளக்கியுள்ளார்.

''ஆறாறையும் நீத்ததன் மேல்நிலையைப்
பேறா அடியேன் பெறுமாறுளதோ'' (கந்.அனு 47)

## 6. சாதனம்:

சுவாமிகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு மார்க்கங்களின் உண்மையை நிலை நாட்டுகின்றார்.

''சரியையா ளர்க்கும், அக் கிரியையா ளர்க்கும்,நற்
சகல யோகர்க்கும்எட் டரிதாய சமயபேதத்
தினுக்கு அணுகொணா மெய்ப் பொருள்தரு
பராசத்தியும் சிவமாகித் துரியமேல் அற்புத
பரம ஞானத்தினிற் சுடர்வியாபித்த நற்பதிதீடு
துகளில் சாயுச்சியக் கதியை யீறற்ற சொற்
சுகசொரூபத்தை யுற்றடை வேனோ''!
(திரு. 650)

## 7. ஐந்தெழுத்துண்மை:

ஆறெழுத்து மந்திரத்தைச் சுவாமிகள் சிறப்பிப்பார். ஆயினும் ஐந்தெழுத்துண்மையைச் சிறிதும் கைவிடார். ''சிவாயநம நாம் ஒரு காலும் நினையாத திமிராகரனை வாவென்றருள்வாயே'' (திருப். 89) முருகன் சிவபிரானின் அஞ்செழுத்தைச் செருக்களத்தில் ஓதினார் என்று சுவாமிகள் கூறுவர். (திருப். 972). முருகன் நமசிவாயப் பொருள் என்பர். (திரு. 1013). சுவாமிகள் பிரணவத்தின் மகிமையைப் பலவிடங்களில் கூறுவர். ''ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகன் உருவம் கண்டு தூங்கார்...'' (கந்த. அல. 55).

## 8. அத்துவிதம் :

இறைவன் ஒன்றாய் வேறாய் உடனாய் இருப்பான் என்று, பதிஞான சம்பந்தர் அருளிய திருவாக்கை அனுசரித்து, அருணகிரிநாத சுவாமிகளும், சைவசித்தாந்த அத்துவித சம்பந்தத்தை இனிது விளக்குவர்: ''அமலனும், எனக் கரசும், அதிகுணனும், நிர்க்குணனும் யோகப் புராதனனும் ,மலமிலியும், நிஷ்களனும், வேடிச்சி காவலனே'' என்று அருணகிரியார் வேடிச்சிகாவலன் திருவகுப்பில் பாடியிருத்தல் காணலாம். பரம்பொருளுக்கு இலயம் போகம் அதிகாரம் என்ற மூன்று ஆற்றல்கள் உண்டு என்பதை, அருணகிரியார் அனுவதித்தருளுவர். இந்த அத்துவித சம்பந்தத்தை சுவாமிகள்விளக்குவது மணிவாசகனார் வாக்குக்கு இணையாகும். ''விண்ணவரும் அறியாத விழுப்பொருள் இப்பொருள்''-''உற்ற ஆக்கையின் உறுபொருள்' நறுமலர் எழுதரு நாற்றம் போல் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்'' என்பது மணிவாசகம். இதனை உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் தமது சிவப்

பிரகாசத்தில் ''உடலுயிர், கண்அருக்கன் அறிவுஒளிபோல் பிறிவரும் அத்துவிதம்'' என்று குறிப்பிட்டருளிவர்.

''பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலம்
தீஇரும்பு பாணியுப்பு
விண்அனிலம் உடலுயிர்நீர் நிழல்உச்சிப்
பளிங்கு பகல் விளக்குப் பால்நீர்
கண்இரவி உணர்வொளிபோற் பிரிவறியா
அத்துவிதக் கலவி''

என்ற சாத்திரப் பாடலும் இதனை வலியுறுத்தும்.

## 9. வள்ளி சன்மார்க்கம்:

அருணகிரியார் சிவபிரானுக்குச் சுவாமிநாதனாக இருந்து முருகன் உபதேசம் புரிந்த தன் இரகசியம் ''வள்ளி சன்மார்க்கம்'' என்று கூறுவர்.

''வள்ளி சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்கு
வல்லைக்குள் தேற்றும் இளையோனே''

என்பது சுவாமிகள் வாக்கு. விள்ளைக்கு-விள் ஐக்கு, அதாவது வினவிய பிதாவுக்குச் சொன்ன உபதேசம். (வல்லைக்குள்-கணநேரத்தில்).

யார் ஒருவர் யான் எனது என்னும் ஆணவ நிலை அற்று என்னை வழிபடுகின்றார்களோ, அவர்களுக்கு நான் எளியன், குற்றேவல் செய்பவன் என்று, முருகப்பெருமான் கூறுவதாக இதன்மூலம் விளக்கப்பெறுகின்றது. இவ்வகையில் உண்மை வழிபாடு செய்தவர்கள் வள்ளிப் பிராட்டி. அதனால்அன்றோ, முருகப் பெருமான் வள்ளிமலைக்குத் தனியேசென்று, வள்ளியின் சன்மார்க்கத்தை உகந்து ஏற்று அவளுக்குத் தலையளி செய்து, அவளைத் தனது இணை பிரியாத சக்தியாக ஏற்றுக் கொண்டார்.

## 10. மோனநிலையும் தீக்கையும்

அருணகிரிநாதசுவாமிகள் தமக்கு முருகப் பெருமான் செய்த தீக்கைகளைப் பல இடங்களில் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். வேற்பொறியும், மயிற்பொறியும் தம்மீது பதித்ததைப் பாடியுள்ளார். பக்குவகாலத்தில் முருகன் தனக்குச் ''சும்மா இரு சொல்லற'' என்று மோனநிலை பற்றிய உபதேசம் செய்ததைக் குறிப்பிட்டுள்ளார். ''அரிய மோன வழிதிறந்த நளினபாதம் எனது சிந்தை அகலாதே'' என்றும்; ''செம்மான் மகளைத் திருடும் திருடன் பெம்மான் முருகன் பிறவான் இறவான், சும்மா இரு சொல்லற என்றலுமே, அம்மா பொருளொன்றும் அறிந்திலனே'' என்றும், சுவாமிகள் பாடியிருத்தல் இங்கு நாம் அறிந்து மகிழத்தக்கது. 'சும்மா இரு சொல்லற' என்றது, ஞானவரம்பாகிய மோனநிலை. இங்கு மோனம் என்றது வாயால் பேசாமையல்ல. அந்தக்கரணம் அடங்கி, நின்றபடி நின்று, இருந்தபடி இருத்தலாகும். இதனைச் சகச நிட்டை என்பர். இங்ஙனம் கரணங்கள் அடங்கி நிற்கப்பெறப்படும்சமாதிநிலை, இராப்பகலற்ற இடமாகும். ''கரணம் மாய்த்து, எனை மரணம் மாற்றிய கருணைவார்த்தை இருந்தவாறு என்!'' என்று அருணகிரியார் பல இடங்களில் இதனைப்புகழ்ந்து பாடுவர்.

## 11. பரமுக்தி:

உடலைத் துறவாமல் முத்தி அடைதலே பரமுத்தி. இது சதேகமுக்தி எனப்படும். மற்றவை விதேகமுக்தி எனப்படும். சுவாமிகள் கிளி வடிவத்தில் முக்தியில் திளைத்தார் என்பது பரமசுகநிலை. இதனை அமுதநிலை என்றும் சுவாமிகள் கூறுவர்.

## 12. சுகபதம்:

இந்நிலையே கடைசியாகச் சுவாமிகள் வேண்டிப் பெற்றதாகும். இடைக்காலத்தில் மோனம் வேண்டும், ஞானம்வேண்டும், ஆசார பூசைவேண்டும் என்றெல்லாம் வேண்டினர். இறுதிநிலையில்

''துகளில் சாயுச்சியக் கதியை
ஈறுஅற்ற சொற்
சுகரூபத்தை உற்று விடைவேனோ''

''பாவகம் தணிந்து உனை உணர்ந்து ஒரு
மவுன பஞ்சரம் பயில் தருஞ்சுக
பதம் அடைந்து இருந்தருள் பொருந்துமது
ஒரு நாளே''

என்று சுவாமிகள் பிரார்த்தனை செய்கின்றார். சைவசமய ஆசிரியர்கள் ஆன திருமூலர் கண்ணப்பர் காரைக்கால்அம்மையார் முதலியோர் உடல்துறக்காமலே பரமுக்தி அடைந்தார்கள். அதுபோல அருணகிரிநாதரும் பரமுக்தி அடைந்தார். அருணகிரியாரின் அருமையான திருப்புகழ்ப் பாடல்களில், திருமூலர் திருமந்திரம், அருள்நந்திசிவாச்சாரியர் இயற்றிய சிவஞான சித்தியார் முதலிய, சாத்திரநூல்களின் கருத்துக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

## முடிவுரை:

அருணகிரிநாதர் ஒரு சிறந்த அநுபூதிமான். ஆதலால் அவரது அருளிப்பாடுகள் அநுபவ சூத்திரங்களாக வெளிப்பட்டுச் சித்தாந்த உண்மைகளை உணர்த்துகின்றன. ''ஐயா அருணகிரியப்பா உனைப்போல மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்''? என்று தாயுமான சுவாமிகளும்; ''சும்மா இரு என நீ சொல் அப்பொருள் ஒன்றும் அம்மா அறிந்திலம் என்று உரைத்த பெம்மான், அருணகிரிநாதர் அனுபவம் நாயேற்குக் கருணைபொழி போரூரா காட்டு'' என்று சிதம்பர சுவாமிகளும், அருணகிரியாரின் அருமைபெருமைகளைப் போற்றிப் புகழ்ந்திருத்தல் காணலாம்.

***

# கம்பரின் பரம்பொருள்

திரு ம. அ. முருகேசன், பி.ஏ., பி.எல்.,
மாவட்ட நீதிபதி, மதுரை.

பாற்கடலில் பள்ளிகொண்ட பரந்தாமனே சக்கரவர்த்தித் திருமகனாக (இராமனாக) அவதரித்து, ''அறத்தொடு மாதவம் வளர்த் தான்'', என்பது எல்லோருக்கும் உடன் பாடான ஒரு கருத்து.

அரக்கர் கொடுமை பொறுக்க முடியாமல் போன நிலையில், சிவனும் பிரமனும் பாற் கடலில் பள்ளிகொண்ட திருமாலைச் சென்று வணங்கி, அரக்கர் தம் கொடுமை கூறியபோது, அந்த அரக்கரை அழிக்க, தான் தசரதன் மத லையாக வருவதாக வாக்குக் கொடுத்துத் திரு மால் இராமனாக அதவரித்தார் என்று, கம்பர் பாலகாண்டம் திருவவதாரப் படலத்தில் கூறு கின்றார்:

''எழுந்தனர் கறைமிடற்று இறையும் தாமரைச்
செழுந் தவிசு உவந்த அத்தேவும் சென்று,எதிர்
விழுந்தனர் அடிமிசை விண்ணுளோ ரொடும்
தொழும் தொறும், தொழும்தொறும், களிதுளங்
குவார்''

''மசரதம் அனையவர் வரமும், வாழ்வும், ஓர்
நிசரத கணைகளால் நீறுசெய்ய, யாம்
கசரத துரக மாக்கடல் கொள்காவலன்
தசரதன் மதலையாய் வருதும் தாரணி''

''வளையொடு திகிரியும், வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளையர்கள் எனஅடி பரவ ஏகி, நாம்
வளைமதில் அயோத்தியில் வருதும் என்றனன்''

என்பது கம்பர் வாக்கு. திருமாலே முழுமுதற் பொருள் என்பது வைணவ சித்தாந்தம். பாற் கடலில் பள்ளிகொண்ட திருமாலே இராமனாக அவதரித்தார் என்று சொன்ன கம்பர்கூட, பின்பு அனுமன் வாயிலாகப் படைத்தல் காத் தல் அழித்தல் ஆகிய முத்தொழில்களையும், மூன்று இடங்களில் இருந்து மூன்று கோலங் களால் செய்யும் பரம்பொருளே, அந்த இருக் கைகளையும் கோலங்களையும் விட்டு, கையில் வில் ஏந்தி, அறத்தை நிறுத்தவும், அல்லதை அழிக்கவும் இராமனாக வந்து அயோத்தியில் அவதரித்தது என்று, சொல்ல முற்படுகின் றார்.

''மூலமும் நடுவும் ஈறும்
இல்லதுஓர் மும்மைத்து ஆய
காலமும், கணக்கும், நீத்த
காரணன் கைவில் ஏந்தி,
சூலமும் திகிரி சங்கும்
கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப்
பொருப்பும்விட்டு அயோத்தி வந்தான்''

''அறம் தலைநிறுத்தி, வேதம்
அருள்சுரந்து அறைந்த நீதித்
திறம் தெரிந்து, உலகம் பூணச்
செந்நெறி செலுத்தி, தீயோர்
இறந்துஉக நூறித் தக்கோர்
இடர் துடைத்துஏக, ஈண்டுப்
பிறந்தவன்; தன்பொற் பாதம்
ஏத்துவார் பிறப்பு அறுப்பான்''

என்பது கம்பர் பாடல். இந்தப் பாடல்களைப் பார்க்கும்போது, ''ஆதி அந்தம் என்ற நிலை யையும், காலம் என்ற கணக்கையும் கடந்து நிற்கும் பரம்பொருள்தான் இராமன்'' என்று கம்பர் அநுமன் வாயிலாகச் சொல்கிறார் என்பது தெளிவாக விளங்குகிறது. அத்துடன், ''இராமனாக அவதரித்த அந்தப் பரம்பொருள் தான், அன்று ஒருநாள் முதலை வாயில் அகப்பட்டு, ''ஆதி மூலமே'' என்று கஜேந்திரன் அழைத்தபோது, விரைந்து வந்து காத்தார்'' என்று பொருள்பட,

''காரணம் கேட்டி யாயின்,
கடையிலா மறையின் கண்ணும்,
ஆரணம் காட்ட மாட்டா
அறிவினுக் கறிவும் அன்னான்,
போர்அணங்கு இடங்கர் கவ்வப்
பொதுநின்று முதலே என்ற,
வாரணம் காக்க வந்தான்,
அமரரைக் காக்க வந்தான்''

என்றும் சொல்கிறார். இந்தப் பாடல்களின் கருத்தை எல்லாம் தொகுத்துப் பார்த்தால், திருமாலே இராமனாக அவதரித்தார்; அந்தத் திருமால்தான் முழுமுதற் பரம்பொருள் என்ற வைணவ சித்தாந்தத்திற்கு விளக்கமாக அமைந்திருக்கின்றன. அப்படியானால், 'திரு மால்தான் பரம்பொருள்' என்ற வைணவ சித் தாந்தத்தைக் கம்பர் ஏற்றுக்கொள்கிறார் என்று படுகிறது.

ஆனால், கம்பர் ஒரு பெரிய ஞானி. பார்க்கப்போனால், உண்மையான கவிஞன், எவனுமே சிறந்த ஞானியாகத்தான் இருக்க முடியும். குறுகிய சமயச் சண்டைகளுக்குள்ளும், வறட்டுத் தத்துவங்களுக்குள்ளும், கவிஞன் சிக்கிக் கொள்ளுவதில்லை. கம்பரும் இதற்கு விதிவிலக்கல்லர். தன்னுடைய காவியத்தின் தொடக்கத்திலேயே, கடவுள் வாழ்த்துக் கூறும்போது, எந்த ஒரு கடவுளையும் பெயரிட்டுக் கூறாமல், முத்தொழிலையும் முக்குணங்களையும் மூன்று நெறிகளையும் உடைய பரம்பொருள் எதுவோ அதையே வாழ்த்துவதாகக் குறிப்பிட்டுத் தன் காவியத்தைத் தொடங்குகிறார். ''பரந்த சூழ்ச்சிப் பல்பெரும் சமயம்'' என்று சமயத்தை ஒரு சாடு சாடுகிறார். சமயத்தவர்கள் தத்தம் கொள்கைகளையே பெரிதாகப் பேசி, அதிலே ஆழ்ந்துபோய், உண்மையான பரம்பொருளை அறிவதில்லை என்ற கருத்தை ஏற்று, ''ஊழ் கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்'' என்றும் சாடுகிறார்.

இப்படி குறுகிய சமயக் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளாத கம்பர், ''திருமாலே பரம்பொருள்'' என்ற வைணவ சித்தாந்தத்தை மட்டும் ஏற்றுக்கொண்டிருக்க முடியாது. முழுமுதற் பொருளே சிவனாகவும், திருமாலாகவும் நின்று, சமயவாதிகள் தத்தமக்குள் வாதிடக் காரணமாகவும் இருக்கிறது என்ற பரந்த கருத்து தான், கம்பருக்கு ஏற்புடையதாக இருக்க முடியும். அப்படியானால், திருமாலே பரம்பொருள் என்று சொன்ன கம்பர் சிவனும் பரம்பொருள்தான் என்று சொல்லி இருக்க வேண்டுமல்லவா? ஆம். அப்படியும்தான் சொல்லியிருக்கிறார். சான்று வேண்டுமா? இதோ பாடல்:—

''மூவர் ஆய், முதல் ஆகி, மூலம்
அதுஆகி, ஞாலமும் ஆகிய
தேவ தேவர் பிடித்த, போர் வில்
ஒடித்த சேவகன், சேண் நிலம்
காவல் மாமுடி சூடு பேரெழில்
காணலாம், எனும் ஆசை கூர்
பாவை மார் முகம்என்ன, முன்னம்
மலர்ந்த பங்கய ராசியே''

'சிவ தனுசை ஒடித்த இராமன் முடிசூடிக் கொள்ளும் அழகைக் காணலாம் என்ற ஆசையினால் மலர்ந்த மங்கையரின் முகங்கள் போல், தாமரைகள் மலர்ந்தன' என்று இந்தப் பாடல் கூறுகிறது. இராமன் ஒடித்த வில்லுக்கு உரிய சிவன்தான், மூவர்ஆகி, முதலாகி, மூலமாகி, ஞாலமே ஆகியவன் என்று முதல் இரண்டு வரிகள் சொல்லுகின்றன. எனவே, மூன்றுக்கும் முதலாகிய மூலபரம்பொருள் சிவன்தான் என்றும், இந்தப் பாடலிலே கம்பர் ஒப்புக்கொள்ளுகிறார். மேலும்,

பற்றுஅவா வேரொடும் பசைஅறப் பிறவிபோய்
முற்றவால் உணர்வுமேல் முடுகினார் அறிவுசென்று
உற்ற வானவன் இருந்துயோகுசெய் தனன்எனின்,
சொற்றவாம் அளவதோ மற்றிதன் தூய்மையே

எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட உலகம் ஏத்த,
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்
கரம்குவிப்ப, வேலை என்னும்
மண்ணும் மணிமுழவு அதிர, வான்அரங்கில்
நடம்புரி வாள் இரவி ஆன
கண்ணுதல் வானவன் கனகச்சடை விரிந்தால்
எனவிரிந்த கதிர்கள் எல்லாம்

என்பன போன்று, இடையிடையே வரும் பாடல்களால், கம்பர் சிவபிரான்பாற் கொண்டிருந்த அன்பும் செவ்விதிற் புலனாகின்றது. ஆகவே, பரம்பொருள் தான் சிவனாகவும், திருமால் ஆகவும் விளங்குகிறது என்ற கருத்துத்தான், கம்பருடைய சமயப் பொது நோக்குள்ள கருத்து என்று, முடிவுக்கு வருவதில் தவறு ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. அது தானே உண்மையான ஞானியின் கருத்தாக இருக்கமுடியும்.

மேலும், ''மூலமும் நடுவும் ஈறும்'', ''அறந்தலை நிறுத்தி'' என்று தொடங்கும் பாடல்கள், அனுமன் என்னும் பாத்திரத்தின் கூற்று என்பதையும், ''மூவர்ஆய், முதல் ஆய்'' என்று தொடங்கும் பாடல், கம்பரின் கவிக் கூற்றாக அமைந்திருப்பதையும் எண்ணிப்பார்த்தால், கம்பர் குறுகிய சமயக் கொள்கைகளுக்குள் சிக்கியவரல்லர் என்பதில் ஐயமே இருக்க முடியாது. கம்பர் சிவ-விஷ்ணு பேதமற்ற, சமரச நோக்குடைய, சான்றாண்மைப் பெருஞானியாக விளங்கியிருந்தார் என்பது, பின் வரும் பாடலாலும் நன்கினிது தெளியப் படுகின்றது.

''அரன்அதிகள், உலகளந்த அரிஅதிகன்
என்றுரைக்கும் அறிவி லோர்க்குப்
பரகதிசென் றடைவரிய பரிசேபோல்,
புகல்அரிய பண்பிற்று ஆமால்;
சுரநதியின் அயலது, வான் தோய்குடுமிச்
சுடர்த்தொகைய, தொழுதோர்க் கெல்லாம்
வரன்அதிகம் தரும்தகைய அருந்ததியாம்
நெடுமலையை வணங்கிச் சென்றான்''

# உத்தர காண்டத்தின் தனித்தன்மை

பேராசிரியர் திரு. செ. வேங்கடராமச் செட்டியார், சிதம்பரம்

அமிழ்தினும் இனிய தமிழ்மொழியில் சிறப்பாகப் புகழப்படும் பெருங்காப்பியம் இராமாயணம் ஆகும். இராமாயணத்தை இயற்றியருளிய பெரும்புலவர் கம்பர் என்ற கவிச்சக்கரவர்த்தியாவர். கம்பர் தம் இராமாயணத்தைப் பாலகாண்டம் முதல் யுத்தகாண்டம் ஈறாகவுள்ள ஆறு காண்டங்களில் நிறைவு செய்திருக்கின்றார். யுத்த காண்டத்தின் இறுதியில் 'விடைகொடுத்தபடலம்' என்ற படலம் உள்ளது. அதில் சுக்கிரீவன் அனுமன் வீடணன் முதலியோர்க்குப் பரிசில்கள் கொடுத்து இராமன் விடைகொடுத்து அனுப்பிய செய்தி கூறப்பட்டுள்ளது.

''பரதனை யிளைய கோவைச்
சத்துருக் கனனைப் பண்டை
விரதமா தவனைத் தாயர்
மூவரை மிதிலைப் பொன்னை
வரதனை வலங்கொண் டேத்தி
வணங்கினர் விடையுங் கொண்டே
சரதமா நெறியும் வல்லோர்
தத்தம பதியைச் சார்ந்தார்''

என்ற பாடலில், அனுமன் முதலிய அனைவரும் இராமன் முதலியோரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு, தத்தம் ஊரை அடைந்த செய்தியைக் காணலாம். அவர்கள் எல்லாம் விடை பெற்றுச் சென்ற பின்னர், இராமன், தன் தம்பிமாரோடு உலக முழுவதும் மனுநெறி முறையால் செங்கோல் செலுத்திச் சீதேவியும் பூதேவியும் வருந்தாமல் மகிழக் காப்பாற்றினான் என்று, இராமன் அரசு செய்ததையும் விளக்கி, இராமாயணத்தை நிறைவு செய்து விட்டார் கம்பர். உத்தரகாண்டம் அவரால் பாடப்படவில்லை. எனவே கம்பராமாயணம் என்பது ஆறு காண்டங்களோடு நிறைவு பெற்றது எனலாம். 'கதை செறி காண்டம் ஏழு' என்று தொடங்கும் பாடலில், பன்மை பற்றிய வழக்கால், வரமிகு கம்பன் சொன்னதாகக் கூறப்பட்டுள்ளது. அவ்வளவே.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கம்பரால் பாடப் படாமையால், உத்தரகாண்டம் தமிழில் மொழி பெயர்க்காமலேயிருந்தது. பின்பு பன்னிரண்டாம் நூற்றாண்டில் 1163 வரையில் வாழ்ந்திருந்த ஒட்டக்கூத்தர் என்ற உயர்புலவர், தமிழ்ப்புலமை நிரம்பப்பெற்றுப் பெருநூல் செய்யும் ஆர்வத்தினராய்க், கம்பரால் விடப்பட்ட உத்தரகாண்டத்தை வான்மீகியின் நூலின்படி மொழிபெயர்த்து இயற்றினார். கலைமகளின் பேரருள் ஒட்டக் கூத்தர்க்கு வாய்த்தமையால், அவர் உத்தரகாண்டத்தை நன்கு பாடி முடித்தார். இவர்க்கு வாணிதாசன் என்ற பெயரும், சோழ மண்டல சதகத்தில் சொல்லப்படுகின்றது. அவர் இயற்றிய உத்தரகாண்டத்தின் சிறப்பே, அவரைச் சோழரின் அவைக்களப்புலவர் ஆக்கியது எனலாம். தக்கயாகப் பரணியும், மூவருலாவும் பிறவும், அவரால் பின்பு பாடப்பட்டவையேயாம் என்பது, ஆராய்ச்சியாளர் தம் கருத்தாகும்.

உத்தரகாண்டத்தின் தொடக்கத்தில் உள்ள பாடல்களை நோக்கினால், அவை புலமைத் தொடக்கத்தில் பாடப்பட்டவை என்பது புலனாகும். பொருட்செறிவும் சொல்லழகும் இனிய நடையும் இன்றிச் சாதாரண நடையில் அமைந்துள்ளது. பாடிப்பாடிப் பழகிய நிலையில் பின்பு செய்த பாடல்கள், இனிய சொல்லழகும் நடையழகும் பொருட்செறிவும் உள்ளனவாகக் காணப்படுகின்றன.

உத்தரகாண்டம் ஒரு தனிநூல் என்று கருதுமாறு, அதன் பாயிரம் அமைந்துள்ளது. மேலும் அனுமப்படலத்தில் சுக்கிரீவன் அங்கதன் அனுமன் வீடணன் முதலியோர்க்குப் பரிசில் கொடுத்து, அவரவர் ஊர்கட்கு விடை கொடுத்தனுப்பிய செய்தி கூறப்பட்டுள்ளது. யுத்தகாண்டத்தில் உள்ள விடை கொடுத்த படலத்தை நோக்கின், இது கூறியது கூறலாக அமைதல் தெளிவாகும். எனவே, இராமாயணத்தின் முதல் ஆறு காண்டங்களிலும், உத்

தரகாண்டம் வேறுபட்ட தனித்தன்மையுடையது என்பது தெளிவு. உத்தரகாண்டத்தில் சொல்லப்படும் நிகழ்ச்சிகள், முந்தைய ஆறு காண்டத்திற் சொல்லப்பட்டுள்ள நிகழ்ச்சிகளுக்கு உரம் ஊட்டுவனவாக -பெருமை சேர்ப்பனவாக உள்ளன எனலாம். இராமனது அரசாட்சியின் சிறப்பு பேசப்படுவது உத்தரகாண்டத்தில்தான். காதல் மனைவியினும் நாட்டு மக்களின் கருத்தே சிறந்தது என்று, ஆட்சி செய்த இராமன் சிறப்பு உத்தரகாண்டத்தால் தான், நன்கு புலப்படுகிறது. ஏகதார விரதனாகிய இராமன், காமவெறி பிடித்த இராவணனைக் கொன்றது மிக்க பொருத்தமுடையதே என்பதை, உத்தரகாண்டத்தைப் படிக்காதவர்கள் அவ்வளவாக நம்பமாட்டார்கள். உத்தரகாண்டத்தில்தான் இராவணன் காம வெறியால் செய்த முறையற்ற செயல்கள் பல விவரிக்கப்பெறுகின்றன.

### இராவணன் காமவெறியால் செய்தவை

இராவணன் அருந்தவம் செய்து பெற்ற பெரு வரங்களால், செருக்குற்றுச் செய்யத்தகுவது அறியாது, காமுகனாக மாறிவிடுகின்றான். ''எனைத்துணைய ராயினும் என்னாம் தினைத்துணையும், தேரான் பிறனில் புகல்'' (திருக்குறள்-114) என்ற குறளுக்குப் பொருத்தமான எடுத்துக் காட்டு ஆகின்றான். தவத்தால் பெற்ற பெருமையெல்லாம் காமத்தால் இழக்கும் இழிநிலை இங்குத் தெளிவாகின்றது.

திருமாலை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருக்கும் வேதவதி என்னும் தவமகள், தன் தந்தையின் விருப்பமும், தன் விருப்பமும் இதுவெனத் தெளிவுபடுத்திப் 'பாம்பணையில் துயிலும் பரமனை-என்னுயிரை-என் துணையை-நாராயணனைக் கணவனாக வரித்தேன் யான்' என்று சொல்லவும், அவள் சொல்லைப் பொருட்படுத்தாது, இராவணன் தன் பெருமையைப் பெரிதும் புகழ்ந்து, தன்னை மணக்குமாறு கேட்பதும், அந்தத் தவமகளின் மலரனைய கரத்தைப் பற்றுவதும், எவ்வளவு பெரிய கொடுஞ்செயல்கள்! திக்கு விசயத்திற்குப் புறப்பட்ட இராவணன், முதலில் பெற்றது வேதவதியின் சாபமேயாகும். ''ஏடா! பிரமன் தந்த வரத்தின் செருக்கால் கூடாத சொற்களைச் சொல்லிக் கூசாது என்னைத் தீண்டினாய்; இனி உனக்கும் இலங்கைக்கும் உறவினர்க்கும் கேடு உண்டாகத் தோன்றுவேன்'' என்று தீயில் மூழ்கினாள். அவளே பின்பு சீதையாகப்பிறந்து இராமனை மணந்து கானகம் புகுந்து, இலங்கையில் சிறையிலிருந்து, இராவணனும் இலங்கையும் அழியக் காரணமாகின்றாள்.

அதற்குப் பின் விண்ணுலகத்தை வெல்ல எண்ணிய இராவணன், அளகாபுரிக்கு அருகில் சேனையோடு தங்கியிருக்கும்போது, பகலவன் மறைய நிறைமதியின் நிலவொளியில், அரம்பை, தன் கொழுநன் நளகூபரனை நோக்கி அழகு செய்து கொண்டு போவதைப் பார்த்துவிடுகின்றான். அவள் பேரழகினை இருபது கண்களால் பருகிக்கொண்டு, 'யார் நீ?' என்கின்றான். அவள் தன்பெயரையும், தன் கணவன் பெயரையும் சொல்லிச் செல்லும்போது, இராவணன் அவள்மேல் விழுந்து அணையப் புகுகின்றான். அப்போது அவள் நடுங்கிக்கொண்டு 'நெறியல்லாத செயலைச் செய்யாதீர்' என்று தொழுது, 'குபேரன் மகனாகிய நளகூபரன் முறையால் நின்மைந்தனே; ஆதலால் நீர் எனக்குக் குரு' என்று சொல்லியும் கேளாது, அவளை வலியப் பற்றிக் காமவிடத்தினைப் பருகுகின்றான். மெல்லிய லாகிய அரம்பை, யானையால் கலக்கப்பட்ட தாமரைத்தடம் போல உருச்சிதைந்து, அவனை வெறுத்து, 'இனி, இவ்வுலகில் மாதர்தம் சிந்தை யுடன் பாடின்றி நீ எவரைத் தீண்டினாலும், அவர் தம் கற்புக்கனலால் வெந்து வீழ்வாய்' எனச் சபித்துவிட்டுத் தன் கணவனிடம் சென்று இதனைச் சொல்கின்றாள். நளகூபரன் வெகுண்டு, ''இனி, இராவணன் பிறன் மனைவியரைத் தீண்டினால் அவன் பொன்முடிகளோடு தலையெல்லாம் பொடியாகி வீழ்க'' எனச் சபிக்கின்றான்.

வருணனின் மைந்தரோடு போர் செய்து வெற்றி பெற்ற பின்னர், இலங்கைக்குச் செல்லும் வழியில், அந்தணர்-கன்னியர் -அரசமகளிர் - கந்தருவப் பெண்டிர் முதலிய பெண்டிரை, இராவணன் காண்கின்றான். கண்ட அளவில் அவர்களைத் தனக்குரியவராக்க எண்ணி, அவர்கள் பூனைவாய் அகப்பட்ட கிளி போலவும், புலிவாயில் அகப்பட்ட மான் போலவும் நடுங்க, அந்தப் பெண்டிரையெல்லாம் தன் புட்பக விமானத்தில் ஏற்றிக் கொண்டு, இலங்கை எய்துகின்றான். அப்பெண்டிரின் தாய்மார்கள் கன்றையிழந்த பசுவினைப் போலக் கதறிக்கொண்டு, 'எங்கள் புதல்வியரை நடுங்கச் செய்தலால், இவ்விராவணன், இலங்கைநகர் பாழாக, தன்முடியுடனே தலைகளற்று வீழ்க' என்று சபிக்கின்றார்கள்.

இந்நிகழ்ச்சிகளையெல்லாம் நோக்கும் போது, இராவணன் திக்கு விசயத்தில், மருத்தன் முதலியவர்களை வென்ற வெற்றியினும், அவன் காம எண்ணத்தால் பெற்ற சாபங்களே மிகுதியென்பது விளங்கும். இராவணன் கடுந்தவம் செய்து பெருவரங்களைப் பெற்ற செருக்கினால்-வலிமையால்-தன்னை நிகர்ப்பவர் இல்லையென்ற எண்ணத்தால்-செய்த தகாத செயல்கள் மிகப்பலவாகும். உலக மாதாவாகிய சீதையை விரும்புதற்கு முன்னரே, பெண்டிர் பலரிடம் தகாத முறையில் தன் ஆசையை நிறைவேற்றிக் கொண்டுள்ளான். தீவினையைச் செய்து பழகிய அவன் எளிய நெஞ்சமே, சீதையையும் காமுறச் செய்தது என்ற அடிப்படையுண்மை, இந்தத் திக்குவிசயத்தால் நன்கு புலனாகிறது. வேதவதி முதலியோர் இராவணனுக்கு இட்டசாபங்கள், சீதையை அவன் தொடாமல் காப்பாற்றின எனலாம்.

கன்னியரையும், கற்புடை மங்கையரையும் கொணர்ந்த புட்பகவிமானம், தரையில் இறங்கியவுடன், வீடணன் சென்று, அதில் பெண்டிர்கள் கண்கலங்கிப் புலம்பிக் கொண்டிருப்பதைக் காண்கின்றான். இது கூடாது என்பதை இராவணனுக்குச் சொல்லியதோடு, இத்

தகைய தீச்செயலின் பயனாகவே, தம் சிறிய அன்னை கும்பிநசி, மது என்பவனால் கவ்ரப் பட்டாள் என்பதைக் கூறுகின்றான். இப்படி யெல்லாம் தனக்குரியரல்லாத பெண்டிரிடம் தகாது செய்த இராவணன், ஏகதார விரத னாகிய இராமனால் கொல்லப்பட்டது பொருந் துவதே என்ற எண்ணம், இந்த உத்தரகாண் டத்து நிகழ்ச்சிகளால் உண்டாகும் என்பது தெளிவு.

**உத்தரகாண்டத்தால் புலப்படும் இராமனது பெருஞ்சிறப்பு**

காத்தற் கடவுளாகிய திருமாலே இராம னாக வந்து அவதரித்து, இராவணனை வென்ற பின் அயோத்திக்கு அரசனாய் ஆட்சி செய்த நிலையினையே, இராமராச்சியம் என்று, புகழ்ந்து கூறுவர். அந்த அரசாட்சியின் சிறப் பைப் பரதன் கூறுகின்றான். அதனைப் பார்க் கின்றபொழுது பதிற்றுப்பத்தில்,

*''பிறர்பிறர் நலியாது வேற்றுப் பொருள்வெஃகாது,*
*மையில் அறினர் செவ்வின் நடந்து,தம்*
*அமர்துணைப் பிரியாது பாத்துண்டு, மாக்கள்*
*மூத்த யாக்கையொடு பிணியின்றி கழிய,*
*ஊழி யுய்த்த வுரவோ ரும்பல்''*

—(பதிற்றுப். 22)

எனப் பல்யானைச் செல்கெழு குட்டுவனுடைய ஆட்சியைப் பற்றிக் பாலைக் கௌதமனார் பாடிய பாடற் பகுதி, நினைவிற்கு வருகின்றது. பல்யானைச்செல்கெழு குட்டுவன் என்னும் சேர வேந்தனின் ஆட்சியில் ஒருவரை ஒருவர் வருத் துவதில்லை; பிறர்க்குரிய பொருளை -தமக்கு உரிமையில்லாத வேற்றுப்பொருளை விரும்பு வதில்லை; குற்றமில்லாத அறிவினையுடைய வர்களாய்ச் செம்மையான நெறியில் நடந்து, தம்முடைய விரும்பத் தக்க மனைவியரைப் பிரியாமல் இருந்து, இல்லறம் நடத்தித் தாம் உண்ணும் பொழுது பிறர்க்கும் பகுத்துக் கொடுத்துப் பின்பு தாம் உண்டு, வயது முதிர்ந்து பழுத்த உடம்போடு நோயேயில்லா மல், மக்கள் உயிர் பிரியுமாறு ஊழிக்காலம் வரையில் அரசு செலுத்திய, அறிவு வலிமை யுடையோரின் தூய வழித்தோன்றல் அச்சேர வேந்தன்' என்று புகழ்கின்றார், பாலைக் கவு தமனார்.

இவ்வடிகளை ஊன்றி நோக்குவோம். மக் களுக்குள் வருகின்ற வேறுபாடுகள் எல்லாம் பிறர் பிறரை நலிவதாலும், பிறர் பொருளை விரும்புவதாலுமே வருகின்றன என்பதும்; அக் காரணங்கள் இல்லையாகவே ஒருவருக்கொரு வர் பகையின்றி நட்புணர்ச்சியுடன் வாழ்ந்தார் கள் என்பதும் புலனாகும். இதனால் அவன் நாட்டில் நீதிமன்றங்களுக்கு வேலையில்லையா யது. வழக்குகள் காரணமாக மக்களுக்குக் காலம் வீணாகவில்லை. எனவே, தம் காலத்தை அறிவின் வளர்ச்சிக்காகச் செலவழித்தனர். குற்றமற்ற அறிவினைப் பெற்றார்கள். அவ் வறிவின் பெருமையால், குற்றமற்ற அறிவினைப் பெற்றார்கள். அவ்வறிவின் பெருமையால், செம்மைநெறியில் நடந்து கொண்டார்கள். தத் தம் உரிமை மனைவியரைப் பிரியாமல் இல் லறம் நடத்தி, இரந்து வந்தவர்க்குப் பகுத்துக் கொடுத்து, பின்புதாம் உண்டு நெடிது வாழ்ந் தார்கள். நோய்வாய்ப்பட்டு இறப்பவர் எவ ரும் இலர். இதனால் அங்கு மருத்துவ நிலை யங்களுக்கே வேலையில்லையாயது என்பது தெளிவாகின்றன.

இவ்வாறே இராம இராச்சியத்தின் பெரு மையைப் பரதன் விவரிக்கின்றான். இராமன் ஆட்சியில் அம்பு முதலிய ஆயுதங்களால் யார்க் கும் மரண பயம் வருவதில்லை. கொடிய சிங்க மும் யானையும் பகையின்றி வாழ்ந்தன. வேங் கைப்புலி பசுவினையும் மானையும் நட்பாகச் சார்ந்து, நட்புணர்ச்சியுடன் பழகி வாழ்ந்தன. நீரினாலும் நெருப்பினாலும் சாகின்றவர்கள் எவரும் இலர். காற்றும், உயிர்களின் உடம் பிற்கு இன்பமாக வந்து வீசும்; கடுமையாக வீசித்துன்புறுத்துவதில்லை. இராமன் ஆட்சி யில் தந்தையிருக்க மகன் இறப்பதில்லை. பெண்டிர் தாம் விரும்பியாங்கு,நல்ல மக்களைப் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். ஆண் மகவு இன்றி வருந்துபவர் இல்லை.

இதுதான் பரதன் வியந்து கூறும் இராம னது ஆட்சிச் சிறப்பு. இத்தகைய ஆட்சியில் ஓரந்தணன் தன் மகன் மரணம் அடைந்தது கண்டு கலங்காமல், தன் மனையாளுடன் இராமனின் அரண்மனைக்கு வந்து, இறந்த மகவினைக்கிடத்தி முறையிடுகின்றான். இரா மன் தன்னாட்சியில் முறையற்ற செயல் ஏதே னும் நிகழ்ந்திருக்கவேண்டும் என்று கருதி, ஒற்றர்களை நாற்றிசையிலும் தேடிப்பார்க்கு மாறு ஏவுகின்றான். தனக்குத் தெரியாமல் தன் ஆட்சியில் நடைபெற்ற சில முறையற்ற செயல்களைத் திருத்திச் சரிசெய்கின்றான். அதனால் அரண்மனையில் இறந்துகிடந்த அந்த ணனின் மகன் உயிர்பெற்று எழுந்து விடுகின் றான்.

( தொடரும் )

# திருவாசகச் சிறப்புரைக்கும் பாடல்கள்

திரு மு. அருணாசலம், எம்.ஏ.

திருமுறைப் பாசுரங்களுக்கு யாரும் சிறப்புப் பாயிரம் பாடியதில்லை. சம்பந்தர், சுந்தரர், காரைக்காலம்மையார், கருவூர்த் தேவர் முதலான ஆசிரியர் பலர், தங்கள் பதிகங்களின் இறுதிப் பாடலைப் பல சுருதியாகப் (பயன்கூறும் பாடலாகப்) பாடும்போது, தங்கள் பெயரைக் குறிப்பிட்டு, யான் செய்த இப் பதிகத்தைப் பாடித் துதிப்பவர், இவ்வகையான பேறு பெறுவார்கள் என்று பாடுகிறார்கள். அப்பர் இப்படிப் பாடியதில்லை. மாணிக்க வாசகரும் பாடியதில்லை. ஆனால் சிவபுராணத்தின் இறுதி வரிகள் மட்டும், இவ்வாறு பல சுருதி கூறினார் என்று கருதுமாறு அமைந்துள்ளன. ''சொல்லற்கரியானைச்.... பணிந்து' இப்பகுதியை மட்டும் தனியே எடுத்து இரண்டாமடியில் வரும் 'சொல்லுவார்' என்ற சொல்லைத் தனிச் சீராக்கி, தனி நேரிசை வெண்பாவாக அமைத்துக் கொண்டோரும் உளர். 'தொல்லை இரும் பிறவி' என்ற பாடல், திருவாசகச் சிறப்புரைக்கும் பழம் பாடல், எல்லோரும் நன்கறிந்தது.

> தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
> அல்லல்அறுத்து ஆனந்தம் ஆக்கியதே-எல்லை
> மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
> திருவா சகம்என்னும் தேன்.

இதனை யார் செய்தார், இஃது எக்காலத்தது? என்னும் வரலாறு எதுவும் விளங்கவில்லை. எனினும் இப்பாடல் ஒன்றே எல்லா ஏட்டுப் பிரதிகளிலும், சிறப்புப் பாயிரம் போல, நூல் முகப்பில் காணப்படுகிறது. ஆனால் இதனுள் சிறப்புப் பாயிரத்துக்குரிய இலக்கணங்கள் இல்லை: நூற்சிறப்பு என்ற அளவே இதன் இயல்பாகும். இதுபோலப் பல பாடல்கள் ஏடு தோறும் வெவ்வேறாகக் காணப்படுகின்றன. சில அவ்வப் பிரதேசத்தில் வழங்கியனவாகலாம். சில ஒருகால் ஏடெழுதினோர் தாமே புனைந்தனவும் ஆகலாம். எல்லா ஏடுகளிலும் இவ்வாறுள்ள பாடல்களைத் தொகுத்தால், அங்குச் சுவையுடைய பல பாடல்களைக் காணலாம். என்பது உறுதி. இவ்வாறு ஏடுகளில் நான் கண்ட நான்கு பாடல்கள், ம. பாலசுப்பிரமணியமுதலியாரால், 1941ஆம் ஆண்டு சமாஜத் திருவாசக ஆராய்ச்சிப் பதிப்பில் தரப்பட்டுள்ளன. (பக்கம் 132) அவை பின்வருவன.

> திருவா சகமென்னும் தேன்பெருகித் தேசமெல்லாம்
> கருவே ரறுத்தருளிக் கருங்கடலை வேர்துளைத்திட்
> டுருவா சகமென்னு முண்மையுணர்ந்த உத்தமனார்
> திருவா சகமென்னும் தேனினருட் காரணமே

> சண்மதகும் மென்புளகக் காடும் படைத்தோனும்
> வண்மையருள் மாணிக்க வாசகனும்-உண்மையினிற்
> றானந்த மாவானும் தன்னொளிவு காணானும்
> ஆனந்த வாத வூரன்.... (4)

> போதலர்ந்து தேன்சொரியும் பொன்னம் பலத்திலுறை
> வாதவூ ரெங்கோமான் வாசகத்தை-ஓதிப்
> பிறவிப் பிணிநீக்கிப் பேரின்ப வெள்ளச்
> செறிவுக்குள் செல்வர் சிறந்து (4)

> வேதாந் தத்தின் பொருள்விளக்காய்,
> மெய்யா கமத்தின் மகிமையாய்
> நாதாந் தத்தின் சுடருருவாய்,
> ஞான நேயத் தின்விளக்காய்ப்,
> போதாந் தத்தின் பொருளாகிப்,
> புகழும் திருவா சகப்பொருளை
> மீதாந் தத்தில் உணர்ந்தவரே,
> விட்டார் பாசங் கிட்டாரே (5)

'திருவாசகம் என்னும் தேன்' என்பது 'தொல்லை யிரும் பிறவி' கடைசிஅடி. இத் தொடரைப் பலர் பல காலத்து எடுத்துப் பாடியிருக்கிறார்கள். அச் சமாஜப் பதிப்பில் வெளி வந்த மேற்காட்டிய இரண்டாம் பாடலும், இங்குக் கருதத் தக்கது. இப்பாடல் மிகப் பல வாறு பழைய ஏட்டுப் பிரதிகளில் காணப்படுகிறது. ஏடுகளில் காணப்படும் வேறு ஐந்து பாடல்களை இதன் பின்னே தருகிறோம். இவற்றுள் முதல் பாடலும் 'திருவாசகம் என்னும் தேன்' என்ற முடிவைக் கொண்டது. இப் பாடல் (கற்பாந்த காலம்), மர்ரே கம்பெனி பதிப்பிலும் வெளிப்பட்டுள்ளது. இதன் மூன்றாம் அடியில் 'உருகிக் குழைந்த' என்பதற்கு 'உரைத்த தமிழ் மாலை' என்பது பாடபேதம். பாடல்கள் பின்வருவன.

> கற்பாந்த காலம் கடவாக் கடல்கடக்கத்
> தெப்பமாய் வந்தெனக்குச் சேர்ந்ததே-அப்பன்
> ஒருவா சகம்கொண் டுருகிக் குழைந்த
> திருவா சகமென்னும் தேன் (6)

வாசகத்தால் ஆவியைநின் றுருக்கும் ஞான
மதவானை வாதவூர் வள்ளல், மேனாட்
பாசவினைப் பற்றறுத்துப் பசுவும் மாய்த்துப்,
பரபோகம் உண்டுமிழ்ந்த பனுவல் இந்நூல்;
தேசுலவும் அறுநூற்றுச் சின்னம் தன்னைச்,
சிவகுருவின் அருள்பெற்றோர் தெளிவர்அன்றி
மாசுதரும் பலசமயப் பிணக்கர் எல்லாம்,
வாசித்து இதன்பயனை மருவிடாரே! (7)

கோயில் மூத்த திருப்பதிகம்
குறித்த கோயில் திருப்பதிகம்
ஆயில் அத்தன் பெருந்துறையும்,
அம்பொற் சபைக்கே நிகராகும்;
பாயும் விடையும் குருந்தடியிற்
பாதம் வைத்த பரிசெனவே
காயம் உடனே சிதம்பரத்திற்
காணா வாறும் கண்டுகொள்ளே (8)

ஊணியார் ஓலை எழுத்தாணி
பற்றி உமை கணவன்
காணிக்கை யாமென் றெழுதிய
பாடல், இக் காசினிமேல்
தோணிப் பதியினீன் வந்தோன்
தமிழினும் சொல்லவற்றோ?
மாணிக்க வாசகன் செந்தமிழே
அன்றி மற்றில்லையே (9)

ஆரவாரம் அறவொரு சொல்லருளும்
அங்க ணானை நினைதொறும் தங்கணீர்
வார வார அழுதருள் வாதவூர்
வள்ள லார்திரு வாசகம் வாழியே (10)

வெள்ளிப்பீ டத்திருந்த வித்தகனார் ஓதுவித்த
பள்ளிக் கூடம்காணப் பாவம்போம்-வள்ளல்
பெருந் துறையைக் காணப் பிணிபோம் அரனார்
குருந்தடியைக் காணப்போம் கூற்று. (11)

திருக்கோவையார் ஏடுகளிலும் சில பாடல்கள் காணப்படுவதுண்டு; ஒன்று பின்வருவது:

தேனூறு நாவாற் சிறப்பாய்த் தினம்மொழிந்த
நானூறு கோவையும்* நன்கொளுவும்—தேனூறு
தென்தமிழ் இன்பம் தெரியாத நாளெல்லாம்
தென்தமிழ் இன்பம் சிறிது. (12)

* 'நன்கெழுதும்'-பாடபோதம்.



மன்னார்குடி வட்டம், கோட்டூர் அருள்மிகு கொழுந்தீசுவரசுவாமி கோயில் திருமண மண்டபத்தினை, நமது அறநிலைய ஆணையர் திரு யு. சுப்ரமணியன் அவர்கள் திறந்து வைத்தல்.

# திருவாய்மொழியும், கம்பரும்

முன்னுரை:

நம்மாழ்வார்:

திருமால்நெறிச் சான்றோர்கள் ஆகிய ஆழ்வார்கள் பன்னிருவருள், நம்மாழ்வார் தலைசிறந்தவர். ஏனைய ஆழ்வார்களையெல் லாம் தமக்கு உறுப்பாகக் கொண்டு, அவர் களுக்கெல்லாம் தாம் உறுப்பியாகப் பெருஞ் சிறப்புற்றுப் பிறங்குபவர், நம்மாழ்வார்! இவர் பாண்டிய நாட்டில், தாமிரபரணி ஆற்றின் கரையில் உள்ள திருக்குருகூரில், வேளாளர் குலத்தில், திருவழுதிவளநாடர் என்பவரது சந்நிதியில் ,காரி என்பவர்க்கு உடையநங்கை யார் திருவயிற்றில் தோன்றியருளினார். தம் மேற்பட்டு, ஏனையர்போலத் தமக்கும் உலக பந்த பாசங்களை விளைவிக்க வந்த, சடம் என்னும் காற்றினைக் கோபித்து, அதனை வெருட்டி ஓட்டிய மாட்சிமை யுடையவராத லின், இவருக்குச் சடகோபர் என்னும் காரணப் பெயர் அமைந்தது. இவர் நம்மைப்போன்று உலகியல் மயக்கங்களுக்கு உட்படாமல் மாறு பட்டுச் சிறந்து விளங்கியவராதலின், இவருக்கு மாறன் என்னும் பெயர் வழங்கும். திருமாலின் அருள்வெள்ளத்தில் திளைத்து ஆழ்ந்து இன் புற்ற ஆழ்வார்களில் முதன்மையும் தலைமை யும் பெற்றவராதலின், இவர் 'நம்மாழ்வார்' என்று புகழ்ந்து போற்றப்பெறுவார். ''நம் பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை என்பர், அவரவர்தம் ஏற்றத்தால்'' என்று உபதேரசத்தினமாலையில், மணவாளமாமுனி கள் விளக்கியிருத்தல் காணலாம்.

திருவாய்மொழி:

இவர் அருளிச் செய்தவை திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய் மொழி என்னும் நான்கு பிரபந்தங்கள் ஆகும். இவைகள் முறையே இருக்கு யசுர் அதர்வணம் சாமம் என்னும் நான்கு வேதங்களின் சாரமாக அமைந்தவை என்று பெரியோர்கள் கூறுவர். திருவிருத்தமும் திருவாசிரியமும் திருமந்திரத் தையும், பெரியதிருவந்தாதி சரமசுலோகத்தை யும், திருவாய்மொழி துவயத்தையும் விளக்கு கின்றன என்று பிள்ளைலோகாசாரியர் என் னும் பெரியவர் சாரசங்கிரகம் என்னும் நூலில் அருளிச் செய்துள்ளார். மற்றும் வேத வேதாந் தங்களிலெல்லாம் சிறப்பாக எடுத்து வற்புறுத் திப் பேசப்படுகின்ற இறைவனின் நிலை, உயி ரின் நிலை, இறைவனை அடைதற்குரிய நெறி, இறைவனை நாம் அடையவொட்டாமல் தடை செய்கின்ற ஊழ்வினை, இறைவன்பால் நாம் அடைதற்குரிய பெரும்பேறு என்னும் ஐந்து பொருள்கள் (அர்த்தபஞ்சகம்) பற்றியும், திருவாய் மொழிப் பாடல்கள் செவ்விதின் விளக்குகின்றன என்று பராசரபட்டர் பணித் தருள்வர்.

''மிக்க இறைநிலையும், மெய்யாம் உயிர்நிலையும்,
தக்க நெறியும், தடையாகித்-தொக்கியலும்
ஊழ்வினையும், வாழ்வினையும் ஓதும் குருகை யர்கோன்
யாழின்இசை வேதத் தியல்''.

சடகோபர் அந்தாதி:

இத்தகைய பல நலங்கள் மிக்க திருவாய் மொழியின் சிறப்பினைக் கவியரசராகிய கம் பர், 'புலம் மிக்கவரைப் புலமை தெரிதல், புலம் மிக்கவர்க்கே புலனாம்' என்றபடி, தாம் இயற்றிய ''சடகோபர் அந்தாதி'' என்னும் நூலில், பலவாறு புகழ்ந்து போற்றிப் பாடி யருள்கின்றார். அந்நூற்பாடல்களுள் ஒருசில வற்றின் பொருளை மட்டும், இயன்றவரையில் ஈண்டுக் கண்டு இன்புறுவோம்.

திருவாய்மொழிச் சுடர்:

முற்காலத்தில் உலகின் இருளை நீக்குகின்ற சுடர்களாய், சூரியன் சந்திரன் என்று இரண்டு மட்டுமே இருந்தன. எம்போன்ற அடியவர் களின் பிறப்பை ஒழிக்கின்ற இரண்டு திருவடி கள் ஆகிய தாமரை மலர்களை யுடையவரும், குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்கு அரச ரும், விரிந்து பரந்த பெரும் புகழை உடைய பெருந்தலைவரும், ஆகிய நம்மாழ்வார் அரு ளிச் செய்த திருவாய்மொழிப் பாடல்களோடு சேர்ந்து, உலகின் இருளை நீக்குகின்ற சுடர் கள், இப்போது மூன்று ஆகிவிட்டன. சூரியன் சந்திரன் ஆகிய இரு சுடர்களாலும் நீக்க இய லாத, நம்முடைய அறியாமைப் பேரிருளை நீக்குதலில், திருவாய்மொழி தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்ததாகும்.

சுடர் இரண்டே பண்டு, மூன்றாயின ;
துகள்தீர்ந்து உலகத்து
இடர் இரண்டாய் வரும் பேரிருள்
சீப்பன; எம்பிறப்பை
அடர் இரண்டுஆம் மலர்த்தாள்
உடையான், குருகைக்கு அரசன்,
படர் இருங்கீர்த்திப் பிரான்,
திருவாய்மொழிப் பாவொடுமே!

## திருவாய்மொழி தித்திக்கும்:

தாம் பாடும் கவிதைச்சுவை மிக்க பாடல் ஆகிய உணவை, பண்இிசைகள் என்னும் கறி வகைகளுடன், திருமால் விரும்பி உண்டு மகிழ்ந் தருளும்படி, மிகுதியாகச் சமைத்துப் படைப் பவரும்; சடகோபர் என்னும் திருப்பெயரை உடையவரும்; பாண்டி நாட்டுக்குத் தலை வரும்; உலகில் உள்ள பாவலர்களுக்கெல்லாம் அரசரும் ஆக விளங்கும் நம்மாழ்வார், அரு ளிச் செய்த திருவாய்மொழியானது, அந்தணர் களுடைய செவிகளில் நுழைந்து சென்று, அவர்களுடைய உள்ளங்களில் புகுந்து நிலை பெற்று, தெவிட்டாத இனிமையினை விளை வித்து நின்று உய்வித்தருளும்.

கவிப்பா அமுதம் இசையின்
கறியொடு, கண்ணன் உண்ணக்
குவிப்பான், குருகைப் பிரான்
சடகோபன், குமரிகொண்கன்,
புவிப் பாவலர் தம்பிரான்
திருவாய்மொழி, பூசுரர்தம்
செவிப்பால் நுழைந்துபுக்கு, உள்ளத்து
உள்ளே நின்று, தித்திக்குமே!

## திருவாய்மொழித் தேன்:

செருக்குற்ற பகைவர்களின் குடலைக் கலங்கச் செய்கின்ற, பாஞ்சசன்னியம் என்னும் சங்கினை உடைய திருமால், திருப்பாற்கடலைக் கடைந்து, தேவர்களுக்கு அமிர்தத்தை வழங்கி னார்; அதுபோலத் துன்பம் தருகின்ற பிறப்பை ஒழித்து, என்னை ஆட்கொண்டருளிய தலை வராகிய நம்மாழ்வார், குறைவில்லாத வேதம் ஆகிய மேட்டின் அளவைக் குறைத்துச் சமப் படுத்தி வளமுடையதாக்கித், திருவாய்மொழி என்னும் சிறந்த தேனை, உலகமெல்லாம் உண்டு களித்து உய்யுமாறு வழங்கியருளினார்.

கடலைக் கலக்கி அமுது அமரர்க்கு
அளித்தான், களித்தார்
குடலைக் கலக்கும் குளிர் சங்கினன்,
குறையா மறையின்
திடலைக் கலக்கித் திருவாய்மொழி
எனும் தேனைத் தந்தான்;
நடலைப் பிறப்பறுத்து என்னையும்
ஆட்கொண்ட நாயகனே !

## திருவாய்மொழி மருந்து:

இழிந்த நாயைப் போலப் பிறருடைய வீட்டு வாயில்கள்தோறும் நுழைந்து, அவ்வீட் டில் உள்ளவர்களுடைய எச்சிற்சோற்றின் மிச் சிலை விரும்பி எதிர்பார்த்து, பேய்போலத் திரிந்து உழலச் செய்கின்ற பிறவியிற்பட்டு வருந்துகின்ற, இழிந்தவன் ஆகிய என்னையும், பிறவி என்னும் கொடிய நோயைப் போக்கு கின்ற மருந்து என்று போற்றிப் புகழத் தகுந்த, நும்முடைய திருவாய்மொழி என்னும் தெய் விக நூலை ஓதி உய்யும்படி செய்து, எனக்குத் தாய்போல் இரங்கிப் பரிந்து உதவிகள்புரிந்த நுமக்கு, அடியவன் ஆகிய யான், முன்பு ஏதே னும் தொண்டு செய்தது உண்டோ? இன்றே யன்றி முன்பும் உமக்குத் தொண்டு ஒன்றும் செய்திலாத என்பக்கல், தாய் போலப் பரிந்து இரங்கி அருள்புரிந்த, நுமது பெருங் கருணைத் திறத்தினை, யான் எவ்வாறு புகழவல்லேன்?

நாய்போற் பிறர்கடைதோறும் நுழைந்து,
அவர் எச்சில் நச்சிப்
பேய்போல் திரியும் பிறவியி
னேனைப், பிறவி என்னும்
நோய்போம் மருந்து என்னும் நுன்
திருவாய்மொழி நோக்குவித்துத்
தாய்போல் உதவிசெய்தாய்க்கு, அடியேன்
பண்டு என்? சாதித்ததே !

## திருவாய்மொழித் தீந்தேறல்:

'மேலேயுள்ள எங்கள் உலகத்துக்கு வந்து மகிழ்க' என்று இந்திரன், முதலிய தேவர்கள் விரும்பி அழைக்குமாறு, தேவருலக இன்பம் கிடைப்பதாக இருந்தாலும்; சிறந்த தொழு வத்தின்கண் வலிமை மிக்க ஏழு எருதுகளை அடக்கி வெற்றிகொண்டு, நப்பின்னைப் பிராட்டியை மணந்தருளிய கண்ணபிரான் ஆகிய திருமாலின் வைகுந்த வாழ்வையே பெறுவதாக இருந்தாலும்; அழகிய திருக்குரு கூரில் வந்து அவதரித்தவரும், நாமெல்லாம் தேர்ந்து ஆராய்ந்து குருவாகக் கொள்ளத்தக்க மாபெருஞானியும் ஆகிய, நம்மாழ்வார் அரு ளிச் செய்த திருவாய்மொழியானது, தன்னை ஓதும்பொழுதெல்லாம் தருகின்ற சுவைமிக்க சொற்பொருள் நலங்கள் ஆகிய தேனை அருந் திக், கவலையின்றி மகிழ்ந்து திரியும் சிறந்த பெரும்பேறே, எனக்கு வந்து வாய்த்திடுவதாக!

போந்து ஏறுக என்று இமையோர்
புகலினும், பூந்தொழுவின்
வேந்துஏறு அடர்த்தவன் வீடே
பெறினும், எழிற்குருகூர்
நாம் தேறிய அறிவன், திருவாய்மொழி
நாளும் நல்கும்
தீந்தேறல் உண்டு உழலும் சித்தியே,
வந்து சித்திக்குமே !

## திருவாய்மொழி செப்பும் பயன்:

உயிர்கள் செல்லுதற்குரிய உயர்கதிக்கு இடையூறாய் நின்று, தடைசெய்கின்ற, குடிப் பிறப்பு கல்வி ஒழுக்கம் என்னும் மூவகைக் குறும்புகளையும் வெறுத்தொழித்தவரும், திருக்குருகூரில் அவதரித்தவரும் ஆகிய நம் மாழ்வார், அருளிச் செய்த திருவாய்மொழிப் பாடல்களை அன்புடன் ஓதத் தொடங்கினால், மதுரகவிகள் நாதமுனிகள் போன்றவர்களாய், எங்களை ஆட்கொள்ளுதற்குரிய திருமால் நெறிப்பெரியவர்கள் எல்லோருக்கும், பக்தி மேலீட்டால் மெய்ம்மயிர் சிலிர்ப்புக்கொள்ளும்; கண்களில் இன்பக் கண்ணீர் நிறைந்து பெருகும்; 'செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே'

என்று, வேதாந்த தேசிகர் அருளிச் செய்தபடி பெருமை மிக்க வேதங்களில் ஐயப்பாடாய் விளங்காமல் இருக்கும் நுண்பொருள்கள் எல்லாம், தெளிவாகச் செவ்வியின் விளங்கிநிற்கும்.

உயிர்த் தாரையிற் புக்கு, உறு
குறும்பாம் ஒரு மூன்றினையும்
செயிர்த்தார், குருகை வந்தார்,
திருவாய்மொழி செப்பலுற்றால்,
மயிர்த்தாரைகள் பொடிக்கும்; கண்கள்
நீர்மல்கும்; மாமறையுள்
அயிர்த்தார் அயிர்த்த பொருள்வெளியாம்;
எங்கள் அந்தணர்க்கே !

**திருவாய்மொழி ஓதின், வாழ்நாள் பெருகும்:**

சிறந்தபுகழை உடைய உண்மைப் புலவர்களும், கவிஞர்களும் ஆகிய தத்துவஞானிகள் அனைவரும், பணிந்து வணங்கித் தமக்கு அடியவர்கள் ஆகப் பெற்றவரும்; வேதங்களில் விதிக்கப்பெற்ற வேள்விகள் யாவும் இடையறாது நடைபெறுகின்ற சிறப்புடையதும், பொருநை என்னும் தாமிரபரணியாறு பாயப் பெற்றதும் ஆகிய, சிறந்த பாண்டிய நாட்டில் தோன்றியருளியவரும்; ஆகிய நம்மாழ்வார், அருளிச் செய்த திருவாய்மொழிப் பாடல்கள், எம்முடைய மனத்தில் நிலைபெற்றுள்ளன. ஆதலால் பிரமதேவன் இவ்வளவு என்று கணக்கிட்டுஎமக்கு எழுதிவைத்துள்ள வாழ்நாளையும், பழைய வினைகளையும் எம்முடன் சேர்ப்பித்து, எம்மை இந்தப் பிறவியாகிய புழுதிக் காலில், நாற்றாக நட்டு வளர்த்து, எம்மை வினைப்பயன்களை நுகர்ந்து துன்புறுமாறு செய்தல், எவர்க்கும் இயலாது. (திருவாய்மொழி ஓதுபவர்களுக்கு, வாழ்நாள் பெருகும்; அவர்களின் பழவினைகள் யாவும் நீங்கியொழியும் என்பது திண்ணம்).

எழுதிய நாளும் விளையும் தொகுத்து,
எம்மை இப்பிறவிப்
புழுதியில், நாற்றுஇட்டு வைப்பரிதால்;
புகழ் மெய்ப்புலவோர்
தொழுதியல் நாயகன், ஓதும்கனல்
துறை நீர்ப் பொருநை
வழுதி நல் நாடன், திருவாய்மொழி
எம் மனத்தனவே!

**முடிவுரை:**

திருவாய்மொழி என்னும் சிறந்த திவ்வியப் பிரபந்தத்தின் அருமை பெருமைகள், எத்தகையவை என்பதனை, மேலே கவியரசராகிய கம்பர் புகழ்ந்துரைத்துப் போற்றிய கவிதைகளால், நாம் தெளிவுற நன்குணரலாம். ''தெய்வங்களில் சிறந்து திகழ்பவர் திருமால்; திருமாலைப் புகழ்ந்து துதித்த தெய்வக் கவிஞர்களுள் சிறந்தவர், திருவாய்மொழி பாடியருளிய பண்டிதராகிய நம்மாழ்வார்! அத்தகைய நம்மாழ்வாரைப் போற்றித் துதித்துப் பாடுதலில், சிறந்த நாவன்மை மிக்கவர், புலவர்களில் தலைசிறந்து கவியரசராகத் திகழும் கம்பநாடரே யாவர்.''

தேவிற் சிறந்த திருமாற்குத்
தக்க தெய்விகக் கவிஞன்,
பாவிற் சிறந்த திருவாய்மொழி
பகர் பண்டிதனே!
நாவிற் சிறந்த அம் மாறற்குத்
தக்க நல் நாவலவன்,
பூவிற் சிறந்த ஆழ்வான்,
கம்ப நாட்டுப் புலமையனே !

என்று பண்டைப் பெரியோர்கள் கவியரசர், கம்பரைப் புகழ்ந்து போற்றி யுள்ளனர். ஆதலின் கம்பரின் கவிதைச் சிறப்பினையும், அவர் புகழ்ந்து போற்றித் துதித்த திருவாய்மொழியின் சிறப்பினையும், நாம் தெளிந்துணர்ந்து, அதனை இடையறாது பலகாலும் பயின்றோதிப் பயன்கொண்டு, திருமாலின் திருவருள் பெற்று உய்ய முயல்வோமாக !

—ஆசிரியர்.



# திருமூலர் அருள்மொழிகள்

'குண்டலினியோகப் பேராசான்'
தவத்திரு ஜி. வி. வேதாத்திரி சுவாமிகள், சென்னை

**தவமும் அறமும்:**

'திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இருவழி யுண்டு;
கிளைக்கும் தனக்கும் அக்கேடில் புகழோன்
விளைக்கும் தவம்அறம் மேற்றுணை யாமே!

கிடைத்தற்கு அரியது மனிதப் பிறவி. பிறவியின் நோக்கம் அறிந்து கொள்வதற்குக் கால அனுபவம் வேண்டும். பெரியோர் வழி காட்டலும் வேண்டும். அக்காலத்திற்குள் புலன்கவர்ச்சியினால் இன்பம், துன்பம் எனும் விளைவுகளைத்தரும் வினைகளை ஆற்றிப் பயன் களைத் துய்த்துத் துய்த்து, மனித மனம் சோர்வு அடைகின்றது. சோர்வுற்று மீள வழி காணாது தவிக்கும் மனித மனத்தின் தளர்ச்சியை நீக்கி, புத்துயிர் ஊட்ட இரண்டு வழிகள் உண்டு என் பதைத் 'திளைக்கும் வினைக்கடல் தீர்வுறுதோணி இளைப்பினை நீக்கும் இருவழியுண்டு' என மகான் திருமூலர் அவர்கள், இத்திரு மந்திரப் பாவில் குறிப்பிட்டு உணர்த்துகிறார்.

தனக்கும் தன்னோடு சேர்ந்த மனித குலத் துக்கும், அந்த இரு வழிகளும் பொதுவாக நல மளிக்கும் என்பதை விளக்குகிறார். அந்த இரு வழிகள் யாவை ? அவை 'தவம்' 'அறம்' என் றும் திட்டவட்டமாக,

"கிளைக்கும் தனக்கும் அக்கேடில் புகழோன்
விளைக்கும் தவம்அறம் மேற்றுணை யாமே"

என்று எடுத்துக் காட்டுகின்றார்.

இங்கு தவம் என்னும் வார்த்தை, உயர் வழி வாழ்வு எனப் பொதுவாகக் குறிக்குமா யினும், இராஜயோகம் எனும் அகநோக்குப் பயிற்சியைச் சிறப்பாகக் குறிக்கும். புலன் வழியே மாத்திரம் இயங்கும் மனதை, உள்முக மாகத் திருப்பி உயிர்மேல் வைத்தால், மனம் லயமாகும். இத்தகைய அகத் தவத்தால் மனம், உயிர், மெய் எனும் மூன்று மறை பொருள் களையும் உணர்ந்து கொள்ள முடியும். புலன் களைக் கொண்டு உலகப் பொருள்களையும், அவற்றின் தொடர்பால் எழும் இன்ப, துன்ப அனுபவங்களையும் துய்ப்பதிலேயே, காலம் கடத்திக் கொண்டிருக்கும் மனம், இத்தகைய புலனுணர்வு அனுபவங்களால் தன்னை எல்லை கட்டிக் கொள்ளுகின்றது. உணர்ச்சி வயப்பட்ட செயல்களின் விளைவால் சோர்வடைகின்றது. தேக்கமுற்றுச் செய்வதறியாது மனம் திகைப் படைகிறது. இதனால் நுண்ணறிவால் உணரத் தக்கதும், பிறவியின் நோக்கமாகியதுமான மெய்யுணர்வு தடைப்படுகின்றது. மனம், உயிர், மெய்யெனும் முப்பொருளின் உண்மை களை, அவற்றின் இருப்பு இயக்கம் விளைவு என்பவற்றை அறிந்து கொள்ள முடியவில்லை. தவம் அல்லது யோகம் எனும் அகநோக்குத் திறனால் உயிர்மேல் மனம் செலுத்தி நிலைத்து ஆழ்ந்து நிற்க முடிகிறது. இப்பயிற்சியை 'அகத் தவம்' என்றும், 'ராஜயோகம்' என்றும் சொல் லப்படுகிறது. இத்தவத்தின் மூலமே மனிதன் அறிவில் நுணுகியும் ஆழ்ந்தும், நிலைத்தும் தன்னை அறிகிறான். தன் தலைவனாகிய மெய்ப்பொருளையும் உணர்கிறான். மனதில் ஏற்பட்ட சோர்வு நீங்கிப் புத்துயிர் பெறுகிறான். மனநிறைவும் அமைதியும் உண்டாகின்றன. இப் பேரறிவின் விளக்கத்திலே இவ்வுலகில் வாழும் மக்கள் மற்றும் உயிரினங்கள் எல்லாவற்றின் பெருமதிப்பையும் உணர்கிறான். இந்தத் தெளி விலே பிறப்பது அறவுணர்வு. உயிர்களுக்குத் துன்பம் எழாது செயலாற்ற வேண்டுமென்ற ஒழுக்கமும், துன்புறும் உயிர்களுக்கு உதவ வேண்டும் என்ற கருணைச் செயலான ஈகையும், தனக்கு வாழ்வளித்துக் காத்து வரும் சமுதாயத் திற்குத் தனது உடல், அறிவு ஆற்றல்களைப் பயன்படுத்தித் தொண்டாற்ற வேண்டுமென்ற கடமையுணர்வும், ஆக இம்மூன்றும் இணைந் ததே அறம் ஆகும்.

ஒழுக்கம், கடமை, ஈகை, எனும் மூன்றும் இணைந்த அறவழி வாழ்வின் மூலம், உயிர்கட்கு அன்பு காட்டி வாழும்போது, அறச் செயல் மனிதனுக்கு இனிமையும் நிறைவும் அளிக்கின் றது. மனச்சோர்வு நீங்கி உற்சாகம் பெருகு கிறது. தவத்தாலும் அறத்தாலும் மனச்சோர்வு நீங்கி அறிவு உயர்ந்து அமைதி உண்டாகிறது.

அறம், தவம் இரண்டும் மனித வாழ்வுக்கு, சோர்வடைந்த மனத்திற்கு, ஊக்கமும் ஆக்க மும் தந்து நிறைவு தருகிறது.

இந்த உண்மைகளையே முன் சொன்ன பாடல் மூலம் திருமூலர் விளக்குகிறார்.

**தத்துவ ஞானிகள்:**

தன்னை யறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்;
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே.

இக்கவி தவத்தின் பெருமையை, குறிப்பாக உயிர் மையத்தை உச்சியில் வைத்து ஆற்றும் துரிய நிலைத் தவத்தின் பெருமையை விளக்குகிறது. வினைப் பதிவுகளைக் களைந்து, தன்னையறிந்து தத்துவ ஞானியாகத் திகழச் செய்கிறது இத்தவம் என்று, இக்கவியின் மூலம் மகான் திருமூலர் உலகுக்கு உணர்த்துகிறார்.

தன்னை அறிய வேண்டும் என்ற பெரு நோக்கத்தோடு எழுச்சி பெற்றதே அறிவின் ஆறாம் நிலையாகும். ஆறாவது அறிவின் சிறப்பாக விளங்குகிறான் மனிதன். எனினும் பிறந்தது முதல் சிந்திக்கும் ஆற்றல் உண்டாகும் வரையிலே, புலன்களின் கவர்ச்சியிலேயே அறிவு இயங்குவதால், இன்ப துன்பச் சுழல்களின் அனுபவங்களிலேயே அறிவை எல்லை கட்டி உணர்ச்சி வயமாகித் தன்னை இழந்து விடுகிறான். தான் பிறந்த நோக்கம் மறந்து போகின்றது. இந்த மறதியிலே பிறப்பது தன் முனைப்பு. தனக்கு மூலமாகவும், முடிவாகவும், தன்னைச் சூழ்ந்தும் தனக்குள் ஊடுருவி நிறைந்தும் உள்ள மெய்ப் பொருளை மறந்து தனது உடல், வலிவு, அறிவுத் திறன், கல்வி, செல்வம், செல்வாக்கு இவற்றைக் கொண்டு எல்லை கட்டிக் குறுகி நிற்கும் மனநிலையே தன் முனைப்பாகும். உண்மை மறந்த சிறுமை நிலையான தன் முனைப்பிலிருந்துபேராசை, சினம், கடும்பற்று, முறையற்ற பால் கவர்ச்சி, உயர்வு தாழ்வு மனப்பான்மை, வஞ்சம் என்ற அறுகுணங்கள் எழுகின்றன. உணர்ச்சி வயமான அறுகுண மயக்கில் செயலாற்றும்போது, தீய விளைவுகளைத் தரும் பழிச் செயல்களும், அச்செயல்களின் பதிவுகளும், மனிதனிடம் பெருகுகின்றன. எனவே, மனிதனிடம் தன் முனைப்பு, உண்மைநிலை அறியா மயக்கம், பழிச்செயல் பதிவுகள் என்ற மூன்று களங்கங்கள் படிந்து அவனைத் துன்பத்துக்கு ஆளாக்குகின்றன. இக் களங்கங்களை ஆணவம், கன்மம், மாயை என்றும் கூறுகிறோம்.

எண்ணிறந்த பிறவிகளின் வினைத்தொடர்களால் கருமூலம் வந்த பழிச் செயல் பதிவுகளைச் சஞ்சிதகர்மம் என்றும், இந்த உடல் எடுத்த பின்னர் ஒரு மனிதன் செயலால் ஏற்பட்ட பதிவுகளைப் பிராரப்த கர்மம் என்றும், இவ்விரு வகையால் ஆக்கப் பெற்ற ஒரு மனிதனின் தன்மை, எதிர் காலத்திலும் முன்வினைகளின் தொடராகவே செயல்புரியும் வினைகளாக மலர்வதை ''ஆகாமிய கர்மம்'' என்றும் வடநூலார் கூறுவர். சஞ்சித கர்மம், பிராரப்த கர்மம் இரண்டையும் 'பழவினை' யென்றும், அதிலிருந்து எதிர்காலத்தில் தொடர இருக்கும் வினைகளைப் 'புகுவினை' என்றும் பல பெரியார்கள் விளக்கி உள்ளார்கள். திருமூலரும் 'முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்' 'பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்' என்று வினைகளைப் பழவினை, புகுவினை என்று இரண்டு பிரிவுக்குள் அடக்கிக் கூறியிருக்கிறார்,

மனிதன், சிந்தனை ஆற்றல் பெருகி, தேர்ந்த குருவின் மூலம் உயிரில் அறிவைச் செலுத்தி லயம் பெறும் அகத்தவம் பயின்று, அகத்தவத்தில் சிறப்பு நிலையான உச்சியில், உயிர் மையம் கொண்டு ஆற்றும் துரிய நிலைத் தவம் அல்லது ''பிரமரந்திர யோகம்'' என்ற நிலையை அடைவானேயானால் அவனறிவு பூரண நிலை அடைகிறது. மெய்ப்பொருளோடு கலந்து நிற்கும் தகுதி உண்டாகின்றது. தன்னையும் தலைவனையும் ஒரு சேர அறிந்து கொள்ளுகிறான். இந்தப் பேரறிவின் நிலையிலே தன் முனைப்பு அற்று இறைவனே தானாகவும் இருப்பதை உணர்ந்து கொள்ளுகிறான். இந்த அறிவின் முழு விரிவு பெற்ற பூரண நிலையிலே களங்க மிலாத் தூய்மை பெறுகிறான்.

புலன் மயக்கில் பதிந்த பழிச் செயல்கள், அத்தனையும் தேய்ந்து வலிவு இழந்து உருக் குலைந்து விடுகின்றன. இதன் விளைவாக எதிர் காலத்தில் ஆற்றவிருக்கும் வினைகள் எல் லாம், அறம் சார்ந்ததாக அமையும்.

மனிதன் தன்முனைப்பு, மயக்கம், பழிச் செயல் பதிவுகள் என்ற மூன்று களங்கங்களி லிருந்து விடுபட்டு, இறைநிலை உணர்ந்த பேரறிவாளனாகத் திகழ்கிறான். இந்தப் பேருண்மைகளையே திரு மூலர், மேற்குறித்த கவியின் மூலம் விளக்குகின்றார்.

**தாம் அறிவார்:**

'தாமறி வார்அண்ணல் தாள்பணி வார்அவர்;
தாமறி வார்அறந் தாங்கிநின் றாரவர்:
தாமறி வார்சிலர் தத்துவ ராவர்கள்;
தாமறி வார்க்குத் தமர்பர னாமே!''

இந்தப் பாடலின் மூலம் தன்னையறிந்த மகான்களின் பெரு மதிப்பை உணர்த்துகிறார் திருமூலர்.

ஆறாவது அறிவைப் பெற்ற சிறப்பு மனிதனுக்கே ஆகும். அவ்வறிவின் நோக்கமே தன்னை அறிதல். நான் யார்? என்ற வினாவை எழுப்பி அதற்குத் தக்க விடை காணும்போது, 'உடல்' 'உயிர்' 'மனம்', 'மெய்ப்பொருள்' ஆக நான்கின் உண்மைகளையும் மனிதன் உணர்ந்து கொள்ளுகிறான். இவ்வறிவால் இந்தப் பேரியக்க மண்டலத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகட் கெல்லாம் பொருள்நிலை, நிகழ்ச்சிநிலையென்ற இருவகையும் உணர்ந்து கொள்ள முடிகிறது.

உதாரணமாக ஒரு மலரை எடுத்துக்கொள் வோம். இது பொருளா, அல்லது நிகழ்ச்சியா? என்று வினவுவோம். இதுபொருள் என்றே பெரும்பாலோர் கூறுவர். இது உண்மை அல்ல. மலர் ஒன்றைச் சிதைத்துப் பல கூறுகளாகப் பகுத்துப் பிரித்துக் கொண்டே போனால், கடைசியில் என்ன காண்போம். மேலும் பகுக்க முடியாத ஒரு நுண் இயக்கத்துகள் நிலைக்கு வருவோம். இதுவே பரமாணு அல்லது ஆகாசம். இத்தகைய பரமாணுக்கள் பல கூடி, அணுவாகி, அணுக்கள் பல கோடி கூடி மலர் என்ற காட்சியாக உள்ளது. அணுக்கள் கூடி இயங்கும் மலர் என்ற காட்சி, ஒரு நிகழ்ச்சியே அன்றிப் பொருளல்ல.

இவ்வுண்மையினைத் திருவள்ளுவர், "பொருள் அல்லவற்றைப் பொருள் என்று ஊணரும் மருளானாம் மாணாப் பிறப்பு" என்று விளக்கியுள்ளார்.

மலர் பொருளல்ல-அணுக்கள் பல கூடிய நிகழ்ச்சிதான் என்று கண்டோம். அப்படியாயின் எது பொருள்—அணு பொருளா? என்று வினவுவோம். அணுவும் இயங்கிக் கொண்டே இருக்கிறது. ஆகவே அணுவும் நிகழ்ச்சியே.

பொருளையும் நிகழ்ச்சியையும் வேறுபடுத்திக் காண்பதற்கு ஒரு வழியுண்டு. அசையும் ஒன்றிலிருந்து இயக்கத்தைக் கழித்து விட்டால்-அசையும் ஒன்றை அசையாது நிறுத்தி விட்டால், மிஞ்சி நிற்கும் நிலையே பொருள். பொருள் அசைந்தால் அதுதான் இயக்கம். அதன்படி அப்பரமாணுவிலிருந்து இயக்கத்தைக் கழித்து விட்டால், அதாவது பரமாணு அசைவின்றி நின்றால், அதன் நிலை என்ன? சுத்த வெளியே. இதுவே பொருள்நிலை. இதன் நுண்ணியக்க நிலையே பரமாணு. உண்மையில் இருப்பு நிலையாகிய தூய வெளியே பொருள். தோற்றத்தினை பொருள் எனக் கூறுவது மொழி வழக்கு. அதனால் உண்மையான பொருள், மெய்ப்பொருள் எனக் கூறப்படுகிறது. இந்த மெய்ப்பொருளைத் தெய்வம், பரம், சிவம், பூரணம், பிரம்மம், ஆதி, அநாதி, தூயவெளி என்று பல பெயர்களால் அழைக்கிறோம். அத்தகைய வெளி தன்னுள் அடங்கிய ஆற்றலால் நுண்ணிய இயக்கமாகத் தற்சுழல் இயக்கமாக இயங்கும்போது அதனைப் பரம அணுவென்றும், சக்தியென்றும், உயிர் என்றும், ஆகாசம் என்றும் கூறுகிறோம். ஆகாசம் தவிர மற்ற நான்கு பூதங்களும் ஆகாசத்தின் திரட்சிநிலையில் திண்மை வேறுபாடுகளேயன்றி வேறில்லை.

நான் யார்? என்ற வினாவுக்கும், இம்முறையிலேயே விடை காணலாம். உடலோ ஆகாசத்தின் திரட்சி நிலையான பருப்பொருள். உடலுக்குள் இயங்கும் உயிர், சிதாகாசமெனும் ஆகாசத்தின் ஒரு சிறப்பு நிலையே. ஆகாசமோ ஆதியான சுத்தவெளியின் அசைவுநிலை, தூய வெளியே மெய்ப்பொருள் என்றும், பூரணமென்றும், பிரம்மம் என்றும் கருதப்படுகிறது.

பரிணாமம் என்கிற இறைவன் திருவிளையாடல், பரத்தின் நுண்ணியக்கமான பரம அணுவாகி, அவை இணைந்த தோற்றங்கள் கோடானுகோடியாகி, அத் தோற்றங்களில், ஒருவகையான சீவனாகி, சீவஇனத்தில் சிறப்படைந்த மனிதனாகி இருக்கிறான். முழுமுதற் பொருளான பிரம்மமே—மெய்ப்பொருளே எல்லாத் தோற்றங்களுமாக உள்ளது. யானுமாக உள்ளது என்ற உண்மை தெளிவாகிறது.

இங்குத் தன் முனைப்பு நீங்கி மனிதன் தலைவனோடு இணைந்து விடுகிறான். இதனைத் 'தாமறிவார் அண்ணல் தாள் பணிவா ரவர்' என்றும், அப்படித் தன்னை அறிந்தவன் உயிர்கட்கு ஆக்கமும், ஊக்கமும் அளிக்கும் அறம் உணர்ந்து செயல்புரிந்து அறத்திற்கே நிலைக்களனாக விளங்குகிறான் என்பதை 'தாமறிவார் அறம் தாங்கி நின்றாரவர்' என்றும், தலைவனுள் தன்னை இணைத்துக் கொண்ட பிறகு அந்த இறைவனின் திருவிளையாடல்கள் அனைத்தையும் தனது அறிவின் வழியே உலகுக்குத் தத்துவஞானமாக வெளியிடுகிறான் என்பதைத் 'தாமறிவார் சிலர் தத்துவராவர்கள்' என்றும், தன்னை அறிந்தவர்கள் பரநிலையும், பரத்தின் திருவிளையாடலாகத் தோன்றிய உயிர்கள் அனைத்தும் தமது சுற்றமாகவும் விளங்கிக் கொள்வர். இப்பேருண்மைகளைத் 'தாமறிவார்க்குத் தமர் பரனாமே' என்றும் விளக்கியருளுகிறார் திருமூலர்.

வாழ்க வையகம்!

வாழ்க வளமுடன்!

## வேண்டுகோள்

அண்மைக்காலத்தில் முக்கியமான பல பெருங்கோயில்களில், நமது ஆணையர் அவர்களின் சுற்றறிக்கைப்படி, கோயில் வரலாறு-பழமை பெருமை-சிற்பம், கல்வெட்டு முதலிய சிறப்புக்கூறுகள்-வரவுசெலவு விவரங்கள்-வீடு மனை நிலபுலச் சொத்துக்கள் - ஊழியர்களின் எண்ணிக்கை-அறக்கட்டளைகள்-சிறப்புநாள் விழாக்கள்-பக்தர்களுக்குச் செய்யப்பட்டுள்ள வசதிகள்-அறங்காவலர் பெயர்கள்-முதலியவற்றைக் குறித்து, தகவற் பலகைகள் எழுதிப் பொதுமக்களின் பார்வையிற் படுமாறு வைக்கப்பெற்றுள்ளன. அவைகள் பயன்மிக்கனவாகவும், பலரும் படித்துப் பாராட்டும் வகையிலும் அமைந்திருக்கின்றன.

ஆதலின் அவற்றைத் தொகுத்து, நமது ''திருக்கோயில்'' இதழிலும் வெளியிட்டால், பக்தர்களுக்கும் பொதுமக்களுக்கும் பெரிதும் பயன்படும்; மேலும், அவைகள் நமது தமிழகக் கோயில்களைப் பற்றிய தகவல் விவர ஆய்வுக் குறிப்பேடுகளாகவும் அமையும். ஆதலால், அத்தகவற் பலகைகளில் உள்ளனவற்றைப் பிரதி செய்து, அவற்றைச் சரிபார்த்தும், தம் கையொப்பம் இட்டும், வடிய விரைவில்-ஒருவாரம் அல்லது பத்துநாட்களுக்குள்-நம் ''திருக்கோயில்'' இதழுக்கு அனுப்பி கைக்குமாறு, நிர்வாக அதிகாரிகள் அனைவரும், பெரிதும் அன்புடன் வேண்டிக் கொள்ளப்படுகின்றனர்,

—ஆசிரியர்.



அருள்மிகு பெருங் கருணாம்பிகை அம்மை,
அருள்மிகு அவிநாசிலிங்கேசுவரர் திருக்கோயில்,
திருப்புக்கொளியூர் அவிநாசி, கோவை மாவட்டம்.

பதிவு எண். எம். 7039



நாமக்கல் அருள்மிகு நரசிம்மசுவாமி கோயிலுக்கு
அறநிலைய அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள்
வருகை தருதல் (3-8-1980)

வெளியிடுபவர் : ஆணையர், தமி நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600 034.
... ரா. முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல்.
... சென்னை-600 002.